


# ஸப்தகிரி

*ஜனவரி*, **1998**

விலை ரூ. 4/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

## விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப் பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மணணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள், ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவறறின் சம்பந்தமான ஆராய்சசிகள் மேற்கொள்ளவும், உரைகளகோவைகள், கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துககளும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயரப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இநத மையததின பெரு முயற்சியாக அமையும். நவீன அச்சகம் ஒன்றினை நிறுவும் எணணமும் மேலாண்மையின் பரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும், தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழந்திடவே மேலாணமை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத தாராளமான நன்கொடை அல்லது நூலகள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனஙகளையும் மேலாண்மை தாழ்மையுடன்_ கேட்டுககொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப் பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மறறும் தத்துவங்கள் பற்றிய அரிய நூலகள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொளளப்படுகிறுரகள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூலகள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறபபு தனி அலுவர (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராயசசி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்



*சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்*
*பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்*
*பெற்றம் மேய்த்துண்ணும் குலத்திற் பிறந்து நீ*
*குற்றேவலெங்களைக் கொள்ளாமற் போகாது*
*இற்றைப் பறை கொள்வா னன்றுகாண் கோவிந்தா!*
*எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு*
*உற்றோமேயாவோம் உனக்கே நாமாட் செய்வோம்*
*மற்றை நங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்.*

[கண்ணபிரானே! விடியற்காலையிலே இங்கு வந்து உன்னை வணங்கி உனது அழகிய திருவடித்தாமரைகளை மங்களாசாசனம் பண்ணுவதற்குப் பலனைக் கேட்டருளவேணும். பசுக்களை மேய்த்துண்ணும் இடைக்குலத்தில் பிறந்த நீ எங்களிடத்தில் உள்ளார்ந்த கைங்கர்யத்தை திருவுள்ளம் பற்ற வேண்டும். இன்று பறையாகிய கைங்கர்யத்தை பெற்றுக்கொள்வதற்காக நாங்கள் வந்துள்ளோம். காலமுள்ளளவும் எவ்வளவு பிறவி எடுத்தபோதிலும் உன்னோடே உறவுடையவர்களாகக் கடவோம். உனக்கு மட்டுமே நாங்கள் அடிமைசெய்யக்கடவோம். எங்களுடைய இதரப் பொருள் விருப்பங்களை தவிர்த்து அருளவேணும்.]




திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில் திருச்சானூர்.

## பத்மாவதி பரிணயம்
(கல்யாணோத்ஸவம்)



**தினசரி காலை 10-30 மணிமுதல் 12-00 மணி வரை**

ரூ. 500/- கட்டணம் செலுத்தி இந்த ஆர்ஜித சேவையில் பங்கு கொள்ளும் குடும்பத்தினருக்கு ஆடை அன்பளிப்பும், ஐந்து நபர்களுக்கு இலவச தரிசனமும் கிடைக்கும்.

பணத்தை நேரிடையாக திருக்கோயில் பேஷ்காருக்கு செலுத்தலாம் அல்லது திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித்தலைவர் பேருக்கு ஏதாவது தேசீயமயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து ரூ. 500க்கான D.D.யை பெற்று அனுப்பலாம்.

---

கண்ணிற்கு விருந்தளிக்கும் கல்யாணோத்ஸவத்தில் பங்குகொண்டு தாயாரின் திருவருளுக்கு பாத்திரமாகுங்கள்.

---

செயலாட்சித் தலைவர்.




"வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்"

ஜனவரி - 1998

மலர் 28 | இதழ் 8
தனிப்பிரதி ரூ. 4/- | வருடச்சந்தா 48/-

சிறப்பாசிரியர் :
**திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.**
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.
* * *

ஆசிரியர்:
**திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**
* * *

துணை ஆசிரியர்:
**திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,**
* * *

அச்சிடுபவர்:
**திரு. எம். லக்ஷ்மண் ராவ்,**
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.
* * *

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

| உள்ளுறை | பக்கம் |
|---|---|
| 1998-ம் ஆண்டு எப்படி இருக்கும்? ... | 10 |
| இறைவன் செய்த தந்திரம் ... | 17 |
| இறைவன் இருப்பது எங்கே? ... | 19 |
| பகவத் கீதை ... | 21 |
| பாகவத தர்மத்தில் கிருஷ்ணாவதாரம் ... | 24 |
| சொன்ன வண்ணம் செய்பவன் ... | 28 |
| ராஸ லீலை .. | 30 |
| ஸ்ரீ ராமாநுஜர் ... | 35 |
| நவதிருப்பதிகள் - ஒரு பார்வை ... | 39 |
| சிரவண பெளிகுளத்து கோமடேஸ்வரர் ... | 42 |
| வைணவ வழக்குச்சொற்களும பொருள்களும் ... | 45 |



அட்டைப்பட விளக்கம் :

முன் அட்டை : மலையப்பசுவாமி (உத்ஸவமூரததி).

பின் அட்டை : திருமலை ஆனந்தநிலைய திருக்காட்சி.

## உங்களுடன்....

நாட்கள் மறைகின்றன. நாழிகைகள் கரைகின்றன: ஆனால் வேட்கைகள் வளர்கின்றன. வேதனைகள் பிறக்கின்றன. அப்பப்பா! மனிதனுக்கு எத்தனை ஆசைகள்! எத்தனை எண்ணங்கள்! அத்தனையும் கற்பனைக் கோட்டைகளே! அவனுடைய ஆசைகளனைத்தும் நிறைவேறுகின்றனவா! இல்லையே அப்படியெனில் ஏன் அவனுக்கு அளவில்லாமல் ஆசைகள் பிறக்கவேண்டும்? ஆம். புவியில் பிறக்கும்போதே அவனுடன் ஆசைகளும் பிறந்து விடுகின்றன. ஆசைகள் இல்லாதவன் இவ் அவனியில் இல்லை என்றே கூறலாம். அப்படி இருந்தால் அவன் சாதாரண மனிதனாக இருக்கமுடியாது. மகானாகத்தான் இருக்கமுடியும். மனிதனுக்கும் மகானுக்கும் என்ன வேற்றுமை? ஆம். மனிதன் தான் வாழ்வதை மட்டுமே விரும்புவான். மற்றவன் வாழ்வதை விரும்பமாட்டான். தன்னுடைய கோரிக்கைகள் நிறைவேற பாடுபடுவான். மற்றவன் கோரிக்கைகளை நிராகரிப்பான். இவற்றிற்கெல்லாம் அடிப்படைக்காரணம் அவனுள் உறைந்திருக்கும் பேராசைகளேயாம். இவற்றிற்கு நேர்மாறானவன் தான் மகான் என்பவன். எப்படி மெழுகுவர்த்தி தன்னை அழித்துக்கொண்டு பிறர்க்கு, இருளை போக்கி நல்வெளிச்சத்தை நல்குகிறதோ அதுபோல தான் வீழ்ந்தாலும் மற்றவர்கள் வாழ்வதை விரும்புவான் மகான்.

உலகில் மானிடராய் பிறத்தல் அரிது. அரிதரிது மனிதநேயமுடைய மனிதனாய் இருப்பது; அதனினும் அரிது மகான்களாய் ஒளிர்விடுவது. அப்படி மகான்களாய் இருப்பார்களேயானால் அவர்களை வள்ளுவர் வாக்கிற்கிணங்க வானுறையும் தெய்வத்தில் வைக்கப்படுவர். அப்படிப்பட்ட மகான்கள் நம் இந்திய மண்ணில் யுகங்கள் தோறும் அவதரித்து அளவில்லா ஆனந்தத்தை அடைய நமக்கு வழிகாட்டி இறைநிலைக்கு உயர்ந்துள்ளனர். அவர்களில் க்ருதயுகத்தில் பக்தப் பிரகல்லாதன், த்ரேதாயுகத்தில் தசரதன், துவாபர யுகத்தில் நந்தகோபன், கலியுகத்தில் ஆழ்வார், ஆச்சாரியர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். சைவ சமயத்தில் நாயன்மார்களும் மெய்யடியார்களும் அடங்குவர்.

ஆசாரியர்களிலே நாயக்கல்லாக விளங்கிய ஸ்ரீமத் பகவத் ராமானுசர் தான் நரகம் செல்லினும் பிறர் மேலான பரமபதம் செல்வதற்கு உகந்த இரகசியமான திருமந்திரப் பொருள்களை திருக்கோட்டியூர் கோபுரத்தின் மேல் ஏறி உலகம் உய்ய ஆசையுடையோர்க்கெல்லாம் கூறிப்போந்தார்.

அருட்சோதி வள்ளலார் "தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று அறிவுறுத்திச் சென்றுள்ளார். இப்படிப்பட்ட மகான்களை விரல்விட்டு எண்ணி விடலாம். தன் வாழ்க்கையே பெரிதாக மதிக்கும் மனிதன் பொது வாழ்க்கையை விரும்புவதில்லை. கற்றவனும் கல்லாதவனும் இவற்றில் சமமாகத்தான் தென்படுகின்றான். கற்றவனுக்கும் கல்லாதவனுக்கும் ஒரே வேற்றுமைதான்

உள்ளது. முதலாமவனுக்கு படிப்பறிவு உண்டு. இரண்டாமவனுக்கு படிப்பறிவு இல்லை. ஆனால் இருவருக்குமே பட்டறிவு இல்லை போலும். இது குறித்தே ஆங்கிலக் கவிஞன் 'டென்னிஸன்' 'அறிவு வந்துவிடும் புத்திவராது' என்று கூறியுள்ளார்.

மனிதன் ஏனோ தேவையற்ற அலைச்சல்களை வைத்துக்கொண்டு மனம் குழம்பி மதிமயங்கி மயக்கத்துடன் திரிகின்றான். வள்ளுவர் வாக்குப்படி உள்ளுவதெல்லாம் உயர் உள்ளலாகக் கொண்டு போதும் என்கின்ற மனப் பான்மையயுடன் ஒருவன் வாழ்வானேயானால் அவனுக்கு அனைத்துச் செல்வங்களும் நீக்கமற கிடைக்கும். அவன் இவ்வுலக வாழ்வினை இனிமை யாக கழித்துவிடலாம். அவன் இவ்வுலக வாழ்விற்கும் மேலாக அவ்வுலக பரலோக வாழ்வை விரும்புவானேயானால் 'கடமையை செய் பயனை எதிர்பா ராதே' என்று கீதை நாயகன் கூறியபடி மட்டற்ற, பற்றற்ற புனித வழ்வினை அவன் மேற்கொள்ள வேண்டும்.

ஆசைதான் அன்பையும் அமைதியையும் குலைக்கின்றன என்பதை யாவரும் உணர்தல் அவசியம். நிறைவேரு, நிலையில்லாத ஆசைகளோடு வாழ்க்கையை கழிப்பதோடு மனநிறைவினை அளிக்கும் பேரின்ப ஆசைகளை மனதில் வளர்த் துக்கொண்டு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழிவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்று நம்மாழ்வார் கூறியபடியே திருவேங்கடவனிடம் அடிமைபூண்டு அவனடிப்பணிய, திருமலைக்கு வந்து அதனினும் துயோமாய் வந்து தூமலர் தூவித்தொழுது வாயினால் அவன் திருநாமங்களைச் சொல்லி மனதினால் அத்திருநாமங்களை மனனம் செய்ய பாலும் கற்கண்டும் பருக பித்தம் தெளிவது போல அளவற்ற ஆசைகளினால் உண்டான பாவங்கள் நெருப்பிலிட்ட பஞ்சுபோலே உருமாய்ந்து போவது உறுதி.

நல்ல இயல்புகளை, நல்ல குணங்களை, மனிதன் தன்னிடம் இருத்திக் கொள்ள, வளர்த்துக்கொள்ள அவன் நல்லநாள் பார்க்கத்தேவையில்லை, மனிதன் இம்மண்ணிற் பிறந்ததே அவனுடைய நல்லநேரம்தான். ஆனாலும் பண்டிகை, பஞ்சாங்கம் என்பவனவற்றை தனக்கு ஆதரவாக வைத்துக்கொண்டு, இந்துவா னவன் 'நல்லநாள்' எனும் ஒரு காலத்தை தன்னையறியாமல் ஆண்டாண்டு காலமாக, நிர்யணித்துக்கொண்டு, நல்லவனற்றை அந்தநாளில் துவக்க விருப்பம் கொண்டுள்ளான். கடந்த பல வருடங்களாக ஒவ்வொரு ஆண் டின் துவக்கநாளான ஜனவரி முதல்நாள் நமக்கு நம்வாழ்வில் ஒரு நல்ல நாளாக அமைந்துவிட்டதில் எதிர்வரும் 1998ஆம் ஆண்டின் முதல்நாளான புத்தாண்டு நாளில் பேராசைகளை விட்டு, தீய எண்ணங்களை நீக்கி, நல்ல எண்ணம் குடிகொள்ளவும் நோயற்ற வாழ்வினை நல்கிடவும் மனதிற் உறுதி பூண்டு பூவைப்பூவண்ணனான திருமலையப்பனின் திருமலர்ப் பாதங்களை பற்றி அவனடி பணிவோமாக.

உள்ளது. முதலாமவனுக்கு படிப்பறிவு உண்டு. இரண்டாமவனுக்கு படிப்பறிவு இல்லை. ஆனால் இருவருக்குமே பட்டறிவு இல்லை போலும். இது குறித்தே ஆங்கிலக் கவிஞன் 'டென்னிஸன்' 'அறிவு வந்துவிடும் புத்திவராது' என்று கூறியுள்ளார்.

மனிதன் ஏனோ தேவையற்ற அலைச்சல்களை வைத்துக்கொண்டு மனம் குழம்பி மதிமயங்கி மயக்கத்துடன் திரிகின்றான். வள்ளுவர் வாக்குப்படி உள்ளுவதெல்லாம் உயர் உள்ளலாகக் கொண்டு போதும் என்கின்ற மனப் பான்மையையுடன் ஒருவன் வாழ்வானேயானால் அவனுக்கு அனைத்துச் செல்வங்களும் நீக்கமற கிடைக்கும். அவன் இவ்வுலக வாழ்வினை இனிமை யாக கழித்துவிடலாம். அவன் இவ்வுலக வாழ்விற்கும் மேலாக அவ்வுலக பரலோக வாழ்வை விரும்புவானேயானால் 'கடமையை செய் பயனை எதிர்பா ராதே' என்று கீதை நாயகன் கூறியபடி மட்டற்ற, பற்றற்ற புனித வழ்வினை அவன் மேற்கொள்ள வேண்டும்.

ஆசைதான் அன்பையும் அமைதியையும் குலைக்கின்றன என்பதை யாவரும் உணர்தல் அவசியம். நிறைவேரு, நிலையில்லாத ஆசைகளோடு வாழ்க்கையை கழிப்பதோடு மனநிறைவினை அளிக்கும் பேரின்ப ஆசைகளை மனதில் வளர்த் துக்கொண்டு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழிவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்று நம்மாழ்வார் கூறியபடியே திருவேங்கடவனிடம் அடிமைபூண்டு அவனடிப்பணிய, திருமலைக்கு வந்து அதனினும் துயோமாய் வந்து தூமலர் தூவித்தொழுது வாயினால் அவன் திருநாமங்களைச் சொல்லி மனதினால் அத்திருநாமங்களை மனனம் செய்ய பாலும் கற்கண்டும் பருக பித்தம் தெளிவது போல அளவற்ற ஆசைகளினால் உண்டான பாவங்கள் நெருப்பிலிட்ட பஞ்சுபோலே உருமாய்ந்து போவது உறுதி.

நல்ல இயல்புகளை, நல்ல குணங்களை, மனிதன் தன்னிடம் இருத்திக் கொள்ள, வளர்த்துக்கொள்ள அவன் நல்லநாள் பார்க்கத்தேவையில்லை, மனிதன் இம்மண்ணிற் பிறந்ததே அவனுடைய நல்லநேரம்தான். ஆனாலும் பண்டிகை, பஞ்சாங்கம் என்பவனவற்றை தனக்கு ஆதரவாக வைத்துக்கொண்டு, இந்துவா னவன் 'நல்லநாள்' எனும் ஒரு காலத்தை தன்னையறியாமல் ஆண்டாண்டு காலமாக, நிர்யணித்துக்கொண்டு, நல்லவனற்றை அந்தநாளில் துவக்க விருப்பம் கொண்டுள்ளான். கடந்த பல வருடங்களாக ஒவ்வொரு ஆண் டின் துவக்கநாளான ஜனவரி முதல்நாள் நமக்கு நம்வாழ்வில் ஒரு நல்ல நாளாக அமைந்துவிட்டதில் எதிர்வரும் 1998ஆம் ஆண்டின் முதல்நாளான புத்தாண்டு நாளில் பேராசைகளை விட்டு, தீய எண்ணங்களை நீக்கி, நல்ல எண்ணம் குடிகொள்ளவும் நோயற்ற வாழ்வினை நல்கிடவும் மனதிற் உறுதி பூண்டு பூவைப்பூவண்ணனான திருமலையப்பனின் திருமலர்ப் பாதங்களை பற்றி அவனடி பணிவோமாக.

## திருமலையில்...

# செய்திச்சுருக்கம்

இந்திய நாட்டின் முன்னாள் குடியரசுத்தலைவர் டாக்டர். சங்கர்தயாள்சர்மா அவர்கள் அண்மையில் திருமலைக்கு வருகை புரிந்தார். அன்றிரவு அவர் திருமலையான் பூலங்கி சேவையில் கலந்து கொண்டார். திருக்கோயில் முகவாயிலில் அவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழுத்தலைவர் திரு. கலிதிண்டி ராமசந்திரராஜு, செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக், இணைச்செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமணியம், மற்றும் இதர பிரமுகர்களும் அவரை வரவேற்றனர். அவர் சுவாமி தரிசனத்திற்கு பிறகு திருக்கோயில் திருஉண்டியில் காணிக்கைச் செலுத்தினார். மறுநாள் காலை சுவாமி சுப்ரபாத அபிஷேக சேவைகளிலும் கலந்து கொண்டார். அதன்பிறகு திருச்சானூர் சென்று ஸ்ரீபத்மாவதி தாயாரை தரிசித்தார். ✣



டாக்டர். சங்கர்தயாள் சர்மாவிற்கு வரவேற்பு நல்கும் பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. கே. ராமச்சந்திர ராஜு மற்றும் செயலாட்சித்தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள்



## தோமாலை சேவை

**தோமாலை சேவை காலை 3.30 மணி முதல் 4-30 வரை நடக்கும். ரூ. 200/- கட்டணம் செலுத்தி டிக்கட் பெற்றுக்கொண்டு இச்சேவையில் கலந்துகொள்ளலாம். முன்னதாக D.D. அனுப்பியும், அல்லது ஒருநாள் முன்னதாக விஜயா வங்கி மூலமும் டிக்கட் பெற்றுக்கொள்ளலாம்.**



ஆழ்வார் திவ்யப் பிரபந்த திட்டத்துறையினர் அண்மையில் கொண்டாடிய ஸ்ரீ பிள்ளைலோகாச்சாரியா, ஸ்ரீ பொய்கையாழ்வார், ஸ்ரீ பூதத்தாழ்வார், ஸ்ரீ பேயாழ்வார் திருநட்சத்திர திருவிழா காட்சிகள்.



## பொறுப்பாண்மைக்குழுவின் முடிவுகள்

திருமலை திருப்பதி தேவஸ்தானம் பொறுப்பாண்மைக்குழு கூட்டம் திருமலையில் அண்மையில் கூடியது. அக்கூட்டத்தின் இறுதியில் பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. கலிதிண்டி ராமச்சந்திர ராஜு அவர்கள் மற்றும் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள் பத்திரிகை நிருபர்களிடம் முடிவுகளை வெளியிட்டார்கள்.

திருமலை திருக்கோயில் முகத்துவாரம் அருகில் வி.ஐ.பி.களுக்கு வரவேற்பு அளிக்கும் முறை சாத்திரத்திற்கு புறம்பானதாக உள்ளதென்றும் மகாரதம் அருகாமையிலுள்ள சேது அருகில் வி.ஐ.பி.களுக்கு வரவேற்பு அளிப்பார்கள என்றும் தெரிவித்தனர்.

திருமலையான் சேஷவஸ்த்திரங்களை இனிமேல் மாநிலத்தில் உள்ள அந்தந்த கோயில்களுக்கும் பகுந்தளிப்பார்கள் என்றும் கூறினர்.

சித்தூர் மாவட்டத்தில் பொலகல, மெதக் மாவட்டத்தில் சங்கர்பேட்டை, பாபன்னபேட்டை, அதிலாபாத் மாவட்டத்தில் குபீர் கிராமங்களிலும் கல்யாண மண்டபங்களை நிறுவிடவுள்ளதாகவும் அறிவித்தனர்.

ஸ்ரீ காளஹஸ்தியில் கண் சிகிச்சை மருத்துவமனை நிறுவ ரூ. 6 இலட்சம் நிதி யுதவி அளித்திட முடிவு எடுத்ததாகவும் கூறினர்.

திருமலை கருடாத்ரி நகரிலிருந்து தகவல் மையம் அலுவலகம் வரையிலான சாலை இரு மருங்கும் ஆறு விக்ரகங்களை ஏற்பாடு செய்வதாக தெரிவித்தனர்.


பொறுப்பாண்மைக்குழு கூட்டத்தில், உறுப்பினர்கள் மற்றும் உயர் அலுவலர்கள்


டாக்டர் எ.கே.வி.எஸ். ரெட்டி

## பணி மாற்றம்

திருப்பதியில் தி.தி. தேவஸ்தான அரும்பொருட்காட்சி தலைமை அலுவலராக இருந்த டாக்டர் எ.கே.வி.எஸ். ரெட்டி ஐதராபாத் ஸாலார்ஜங் அருட்பொருட்காட்சி இயக்குனராக பணி மாற்றம் ஆனார். அண்மையில் அவர் ஐதராபாத்தில் பதவிப்பொறுப்புகளை ஏற்றுக்கொண்டார்.



## ஆகாச கங்கைக்கு பூமி பூஜை

திருமலையில் ஏழு கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஆகாசகங்கை அணைகட்டை கட்டிட அண்மையில் பூமி பூஜை நடந்தது. புதுதில்லியைச் சேர்ந்த தொழிலதிபர் திரு. ஒன்விதரு என்பவர் ரூ.12 கோடி செலவில் இந்த அணையைக் கட்டிட உள்ளார். இந்த அணையை கட்டிட சுமார் 18 மாதங்கள் ஆகும்.

இந்த பூமி பூஜை விழாவில் தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. மகாதேவ நாயுடு, செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக், இணைச்செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமண்யம், தலைமைப் பொறியாளர் திரு. முனிரெட்டி மற்றும் இதர உயர் அலுவர்களும் கலந்து கொண்டனர்.

இந்த அணைக்கட்டை கட்டுவதினால் திருமலையில் நீர் பற்றுக்குறை பிரச்னை குறைய வாய்ப்பு உள்ளது.



ஆகாசகங்கை அணைக்கட்டு பூமிபூஜை காட்சிகள்




தமிழ்நாடு மாநிலம் வேலூரில் அண்மையில் தி.தி. தேவஸ்தான தகவல் மையம் மற்றும் வழிபாட்டு அரங்கு திறக்கப்பட்டது. அதுபோது தி.தி. தேவஸ்தான இணைச்செயலாட்சித் தலைவர் திரு. ராமகிருஷ்ணா அவர்கள் மற்றும் சிறப்புநிலை துணைச்செயலாட்சித் தலைவர் திரு. இ. குருவைய்யா அவர்கள் கலந்துகொண்ட போது.

# 1998-ம் ஆண்டு எப்படி இருக்கும்?

பராசரம் பாலசுப்ரமண்யம் - திருச்சானூர்.

அன்பார்ந்த வாசகப்பெருமக்களே! உங்கள் அனைவருக்கும் எனது புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்.

இங்கு கூறியுள்ள பலன்களெல்லாம் பொதுவானவையாகும். இப்பலன்களெல்லாம் அவரவர்களுடைய ஜாதகப்படி நடக்கும் தசாபுத்திகளின் பலனுக்கு ஏற்ப மாறுதலுக்குட்பட்டதாகும். மற்றும் வேகமாகச் சஞ்சாரம் செய்யும் மற்ற கோள்களான சூரியன், சந்திரன், புதன், செவ்வாய் மற்றும் சுக்கிரன் ஆகியவர்கள் கொடுக்கும் பலன்களினாலும் மாறுபடவாய்ப்புண்டு. ஒருசிலகிரகங்கள் நல்ல இடங்களிலிருந்து நன்மையான பலன்களை வழங்குவார்கள். வேறுசில கிரகங்கள் தாங்கள் இருக்கும் இடத்திற்கு ஏற்ப தீய பலன்களை கொடுக்கக் கடமைப் பட்டவர்களாவார்கள். எனவே நன்மையும் தீமையும் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் ஏற்படுவது என்பது இயற்கையாகும். இருபகற்பொழுதிற்கு இடையில் ஓர் இரவு வருவதும், இரு இரவுகளுக்கு இடையில் ஒரு பகற்பொழுது வருவதும் எவ்வாறு தடுக்கமுடியாதோ அவ்வாறே மனிதனின் வாழ்நாளிலும் இன்பமும் துன்பமும் தொடர்ந்து வரத்தான் செய்யும். இதில் மாற்றம் கிடையாது. யாராலும் மாற்றவோ மறுக்கவோ இயலாது. எனவே இறைவனின் திருவடிகளில் பரிபூரணமாகச் சரணடைந்து, ஒன்றுபட்ட முழுமையான மனத்துடன் பிரார்த்தனைச் செய்தால், துன்பங்கள் ஒழிந்து நன்மைகள் பெற்று நலமாக வாழலாம்.

## மேஷம் :



(அஸ்வினி, பரணி மற்றும் கிருத்திகை முதல்-பாதம்)

குருபகவான் உங்கள் இராசிக்கு பதினொன்றில் வந்துவிட்டார. கேதுவும் பதினொன்றில் வீற்றிருக்கிறார். இதனால் பணவசதி பெருகும். கடன்களை பைசலாகும். நோய் கட்டுக்குள் அடங்கி இருக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். உடல்நலம் சீராக அமையும். கௌரவமும் புகழும் நாளுக்கு நாள் அதிகரிக்கும். கணவன் - மனைவியினிடையே சுமூகமான உறவு நீடிக்கும். அலுவலகத்தில் பணிபுரிபவர்கள் பதவி உயர்வும் இடமாற்றமும் பெறுவார்கள். இடமாற்றம் மனதிற்கு மகிழ்ச்சித் தருவதாகவே அமையும். நீண்டதூரப் பயணம் இன்பமூட்டுவதாகவும், பயனுள்ளதாகவும் அமையும்.

உரம் மற்றும் இரசாயன வியாபாரிகள் அதிக இலாபம் காண்பார்கள். ஏற்றுமதி செய்யும் வர்த்தகர்கள், பெருமளவு ஏற்றுமதிக்கான உத்தரவு கிடைக்கப்பெறுவார்கள். சிலர் வெளிநாட்டிற்குச் செல்லும் நல்ல வாய்ப்பும் பெறுவர. மனை மற்றும் பூமி போன்ற அசையா சொத்துக்களின் மீது முதலீடு செய்யும் யோகமும் உண்டாகும்.

எனினும் பன்னிரண்டில் இருக்கும் சனி, உங்கள் இராசியில் பிரவேசிக்கிறார். இதனை ‘ஜன்மசனி’ என்பார்கள். இராகுவும் ஐந்தில் உள்ளார். இவ்விரண்டு நிலைகளும் நன்மை தராது. குடும்ப உறுப்பினர் ஒருவரின் உடல் நிலைக் காரணமாகக் குதூகலமிழக்க வேண்டிவரும். சிலர் கடத்திச் செல்லப்படக்கூடும். எனவே விழிப்புடன் இருத்தல் நலம். நண்பர்கள் மற்றும் சகோதரர்களிடையே விரோதம் உண்டாகலாம். குடும்பத்தை விட்டுப் பிரிய நேரலாம். குழந்தைகளின் உடல்நலமும், படிப்பும், பாதிப்புக்குள்ளாகலாம். பயணத்தில் கைப்பொருள் இழக்க நேரிடும். தொழிற் பங்காளி உங்களை ஏமாற்ற உள்ளார். எச்சரிக்கையுடனிருக்கவும்.

## ரிஷபம் :



(கிருத்திகை, 2,3,4 பாதங்கள், ரோகிணி, மிருகசீர்ஷம், 1,2 பாதங்கள்)

சனி உங்கள் இராசிக்கு பன்னிரண்டில் வர உள்ளார். இது ஏழரையாண்டுச் சனியின் தொடக்கக் காலமாகும். குடும்பத்தில் ஒருவரையோ அல்லது வேறு உறவினரையோ இழக்க நேரிடலாம்.

வீண் செலவுகள் அதிகரிக்கும். கணவன்-மனைவி உறவில் விரிசல் ஏற்படலாம். பொருளாதாரச் சிக்கல்கள் உருவாகும்.

நச்சுத் தன்மைக் கொண்ட பூச்சிகள் அல்லது விலங்குகள் மூலமாக ஆபத்து நேரிடலாம். முன்னெச்சரிக்கையாக இருக்கவும்.

இராகுவின் நான்காம் வீட்டுச் சஞ்சாரத்தினால் தாயின் உடல்நிலைப் பாதிப்புக்குள்ளாகும். உறவினர்களிடையே பகை ஏற்படும். பாகப்பிரிவினைக் காரணமாகத் தகராறு உண்டாகலாம். குழந்தைகளின் படிப்பில் மந்தநிலைக் காணப்படும். சிலருக்கு இகழ்ச்சி உண்டாகலாம். அரசியலில் உள்ளவர்களுக்கு தேர்தலில் போட்டியிட அனுமதி மறுக்கப்படலாம்.

பொதுவாழ்விலோ அல்லது அலுவலகத்திலோ சட்டவிரோதமாக நடந்துக்கொண்டதின் விளைவாக, சிலர் சிறைத் தண்டனைப் பெற வாய்ப்புள்ளது. எனினும் பத்தில் உளவும் குருவினால் சில நன்மைகளும் ஏற்பட வாய்ப்புண்டு. உடல் நலம் சீராக இருக்கும். அலைச்சல் குறையும், பணவசதி பெருகும். மனம் அமைதி அடையும். புதிய முயற்சிகள் வெற்றியையும், இலாபத்தையும் வழங்கும். கடன்கள் உடனுக்குடன் தீர்க்கப்படும்.

பகைவர்களின் தொல்லைகள் குறையும். விளையாட்டுத் துறையிலுள்ளவர்கள் வெற்றி வாகைச் சூடி புகழ் பெறுவர். இளைய சகோதரர் அல்லது சகோதரியின் மூலம் நன்மைகள் விளையும். வடகிழக்குத் திசையினின்று மகிழ்ச்சியான தகவல்கள் பெற வாய்ப்புள்ளது.

மிதுனம் :



(மிருகசீர்ஷம், 3,4 பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3)

கேதுவின் ஒன்பதாம் இடத்துச் சஞ்சாரம் நன்மை பயப்பதாக அமையவில்லை. வீட்டிலும், வேலைசெய்யும் இடத்திலும் மனஅமைதி பெற இயலாது. நீண்ட தூரப்பயணத்தினால் பாதிப்புகள் அதிகமுண்டு. செய்யும் தொழிலில் மாற்றம் ஏற்படும். கடன்பெற முயற்சி மேற்கொள்ளுவீர்கள்.

மற்ற கோள்கள் நன்மைப் பயக்கக்கூடிய நிலைகளில் சஞ்சரிக்கின்றனர். இராகு மூன்றிலும், குரு ஒன்பதிலும், சனி பதினொன்றிலும், உலவுவது மிகுந்த நலம் பல காண உதவும் குறுகிய தூரப்பயணம் நல்ல இலாபம் ஈட்டித்தரும். இளைய சகோதர-சகோதரிகளினால் நலம் விளையும். எனினும் ஒரு சிலரது மாமனாரின் உடல்நிலை மிகவும் கவலைக்கிடமாகும்.

மின்சாரம், கணிப்பொறி, தொலைக்காட்சிப் பெட்டி போன்ற சாதனங்களை விற்பனைச் செய்யும் வர்த்தகர்கள் அதிக லாபம் காணப்பெறுவார்கள். திருமணத்தடைநீங்கி மணம் கண்டு மகிழ்வார்கள். குழந்தைப் பேறும் உண்டாகும். இவ்வருட இறுதிக்குள்ளாக புதிய வீடு வாங்கும் யோகம் உண்டாகும். சிலருக்கு பதவி உயர்வும், ஊதிய உயர்வும் உண்டாகும். உடல்நிலை நன்றாக இருக்கும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நிறைவேறும். தந்தையின் உடல்நிலை சீர்பட்டு, அவரால் நலம் விளையும்.

சினிமா மற்றும் புகைப்படத் தொழிலில் உள்ளவர்கள் வெற்றியைக் காண்பார்கள். மாணவர்கள் போட்டித் தேர்வில் வெற்றி காண்பார்கள். பயன்படத்தும், தரிசாகவும் உள்ள நிலத்தை விற்பதன் மூலமாக எதிர்பாராத அளவிற்கு பொருள் வரவு உண்டாகும். சிலருக்கு எதிர்ப்பாராத இனங்களில் வருவாய்ப் பெற வாய்ப்புள்ளது.

கடகம் :



(புனர்பூசம் 4, பூசம், ஆயில்யம்)

எட்டில் உலவும் குரு உங்களின் மருத்துவச் செலவுகளை அதிகரிக்கச் செய்வார். பயணம் பயன்தராது. நல்ல நண

பர்களையும், உறவினர்களையும், பகைத்துக்கொள்ள வேண்டிவரும். மனைவி, குழந்தைகளை விட்டுப் பிரிந்து வாழும் நிலை உருவாகலாம்.

இராகு கேது முறையே இரண்டிலும் எட்டிலும் அமைந்திருப்பது நன்மை தரும் அமைப்பாகாது. குடும்பத்தகராறு அதிகரிப்பதன காரணமாக வீண்செலவு மேற்கொள்ள வேண்டிவரும். குடும்பத்தில் மகிழ்ச்சி குறையும். எதிரிகளினால் தொல்லைகளும், ஆயுதத்தினால் உடலில் காயமும் ஏற்பட வாய்ப்புண்டு. மற்றும் சிலர் காசநோயினால் பீடிக்கப்படுவார்கள். பணப்பற்றுக்குறை பெருகும். எனினும் எட்டில் உலவும் குரு வங்கியின் மூலம் கடன்பெற வைத்து, பணநெருக்கடியைக் குறைதது, தொழிலில் நிலைத்திட வழிவகுப்பார். வீடு, மனை, வாகனம் போன்ற சொத்துக்களின் மீது கடன் வழங்குபவர்கள் மிகுந்த ஆதாயத்தைக் காண்பார்கள். எனினும் வெளிநாட்டுப் பயணமும் வர்த்தகமும் பயனுள்ளதாக அமைவது கடினம்.

இவ்வாண்டு பத்தாம் வீட்டிற்கு வரும் சனி, உங்களைப் புதிய சூழ்நிலையில் பணிபுரிய வைப்பார். வடமேற்கு திசையிலிருந்து நற்செய்திவரும். கமிஷன், தரகு மற்றும வாகனப் போக்குவரத்து வியாபாரிகளின் நிலை உயரும். சட்டம் மற்றும் தொழில் வளர்ச்சிக்கான ஆலோசனை வழங்கும் துறையிலீடுபட்டுள்ளவர்கள் சில தொல்லைகளைச் சந்திக்க வேண்டிவரும். சிலர் தமது இல்லத்தரசியின் செயலுக்காக புதிய கடன் பெற வேண்டிஇருக்கும்.

## சிம்மம் :



(மகம், பூரம், உத்திரம் முதல்பாதம்)

இராகு உமது இராசியிலும் கேது ஏழிலும் இருப்பது நன்மை விளைவிக்கும் அமைப்பாகாது. மனைவியின் மூலமாகவோ அல்லது வர்த்தகப் பங்காளிகள் மூலமாகவோ பொருள் இழப்பும் இன்னல்களும் ஏற்படலாம். ஒரு சிலருக்குத் திருமணம் தள்ளிப்போகலாம் அல்லது தாமதமாகலாம். பாஸ்போர்ட், விசா பெறுவதில் இடையூறுகள் ஏற்படும். நெருங்கிய நண்பர்கள் பகைவர்களாக மாறுவர். பயணத்தின்போது பொருள் இழப்பு உண்டாகலாம்.

சனியின் ஒன்பதாம் வீட்டு சஞ்சாரமும் நன்மை பயப்பதாக அமையவில்லை. குடும்பத்தில் தகராறுகள் உண்டாகும். மன அமைதி கெடும். பணப் பற்றுக்குறை பெருகும். தொழில் நடத்துவது மிகுந்த சிரமாக இருக்கும். கடன்பெற வேண்டிய நிலை உருவாகலாம். உங்களின் தந்தையாரின் உடல்நிலையில் பாதிப்பு ஏற்படலாம். தொழிலில் பலவிதமான ஏமாற்றத்திற்கு ஆளாவீர்கள்.

**எனினும் குரு உங்களது** இராசிக்கு ஏழில் வந்துள்ளது மகிழ்ச்சி தரக்கூடியதாகும். திருமணத்தடையை நீக்கி மண மேடை ஏறச்செய்வார். கணவன் மனைவி உறவில் மகிழ்ச்சி நிலவும். நீண்ட நாட்களாக இழுத்துக் கொண்டிருந்த வழக்கு முடிவுக்கு வரும். தொழிலிலும் வியாபாரத்திலும் மிகுந்த அபிவிருத்தி உண்டாகும். மகான்களின் தரிசனமும் ஆசியும் பெறுவீர்கள். சென்ற ஆண்டு வெளிநாட்டு வர்த்தகத்தில் ஏற்பட்ட இடையூறுகள் தற்போது விலகிவிடும். அதன் மூலம் வெளிநாட்டு வியாபாரம் அதிக அளவில் பெருக வாய்ப்புள்ளது. பொது வாழ்வில் ஈடுபட்டுள்ளவர்கள் புகழ்பெறுவார்கள்.

## கன்னி :



(உத்திரம் 2,3,4 ஹஸ்தம், சித்திரை 1,2 பாதங்கள்)

துன்பங்கள் எல்லா திசையிலிருந்தும் வந்து வாட்டும். நண்பர்களையும் உறவினர்களையும் பகைத்து கொள்ளுவீர்கள். குருவின் ஆறும் வீட்டுச் சஞ்சாரம் பயனுள்ளதாகாது. உடல் நலம் குன்றும். பொருள் இழப்பு ஏற்படும். பயணத்தில் இன்னல்கள் உண்டாகும். உங்களின் சட்டவிரோத நடவடிக்கைக்காரணமாக அரசாங்க தண்டனை பெற வேண்டியுள்ளது.

இராகுவின் பன்னிரண்டாம் வீட்டுச் சஞ்சாரத்தினால் கண் நோய், காய்ச்சல், வெட்டுக்காயம், காலில் பலமாக அடிபடு

தல், போன்றவை, ஏற்படலாம். வீண் செலவுகளும், தூக்கமின்மையும் உண்டாகும்.

போதாதற்கு சனியின் எட்டாம் வீட்டுச் சஞ்சாரம் மேற்சொன்ன இன்னல்களை இரட்டிப்பாக்க உள்ளது 'அஷ்டம சனி' என்பார்கள். அந்த கால் கட்டம் உங்களுக்கு ஆரம்பமாகிறது. முழங்கால் வலி ஏற்படும். நீங்கள் கூறுவது நூறு சதவீதம் உண்மையாக இருப்பினும் அதனை மற்றவர் நம்பாது உங்களைத் தவறுகவே எடை போடுவார்கள். நீதிமன்றங்களுக்குச் சென்று வரவே நேரம் சரியாக இருக்கும். வழக்கு முடிவுக்கு வராது. பொருள் விரயம்தான் மிஞ்சும். எனினும் கேதுவின் ஆறும் வீட்டுச் சஞ்சாரம் உற்சாகத்தை அளிக்கக்கூடியதாகும். மேற்சொன்ன துன்பங்களையும், இன்னல்களையும் குறைக்கவழி உண்டாகும். 'லக்ஷ்மி கடாக்ஷயோகம்' என்பார்களே அது தற்போது உண்டாகும். பணநெறுக்கடி குறையும். பகைமை பாராட்டியவர்கள் பணியிலிருந்து விலகிவிடுவார்கள். நோயிலிருந்து நிவாரணம் பெறலாம். கடன் சுமை பெருமளவில் குறைந்து விடும்.

## துலாம் :



(சித்திரை 3,4 ஸ்வாதி, விசாகம் 1,2,3 பாதங்கள்)

ஏழில் தன்னுடைய நீச ஸ்தானத்தில் சனி வருகிறுர். உடலில் பலவிதமான நோய்கள் உண்டாகும். குடும்பத்தை விட்டுப் பிரிய வேண்டிவரும். தொழில் பாகஸ்தர்களிடையே மனக்கசப்பு உண்டாகலாம்.

குழந்தைகளின் படிப்பும், உடல்நிலையும் கேதுவின் ஐந்தாம் வீட்டுச் சஞ்சாரத்தினால் பாதிக்கப்படலாம்.

மனைவியின் பெயரில் செய்யும் வர்த்தகம் பொருள் இழப்பிலும் வழக்கிலும் போய் முடியும். பாகஸ்தர்களின் நம்பிக்கையை இழப்பதன் காரணமாக கூட்டு வியாபாரத்தை மூடும் நிலைமை ஏற்படும்.

எனினும் ஐந்தில் குரு வந்துள்ளார். இது மிகவும் உற்சாகத்தைக் கொடுக்கக்கூடியது. குருபலம் காரணமாக திருமணம் தடையின்றி நடைபெற உள்ளது. மழலைச் செல்வமின்றித் தவிப்பவர்கள், குழந்தைப் பாக்கியம் அடையப்பெறுவார்கள். குடும்பத்தில் மகிழ்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும். புதிய வீடுகட்டும் யோகமும் உண்டு. நண்பர்களிடமிருந்து எதிர்பாரா உதவி கிடைக்கும். புண்ணிய ஸ்தல யாத்திரை மேற்கொள்ளுவீர்கள்.

விளம்பரத்துறையில் ஈடுபட்டுள்ளவர்கள் பெருமளவு முன்னேற்றம் காண்பார்கள. தந்தையின் உடல் நலம் சீராக அமையும். அவரது தொழில் அபிவிருத்தியடைந்து அதன்மூலம் சிறந்த இலாபம் காணமுடியும்.

பதினொன்றில் இராகு உள்ளதும் நன்மை பயப்பதாகும். நண்பர்களும் மூத்த சகோதரர் மற்றும் பெரியவர்களின் உதவிகள் தக்கச் சமயத்தில் வந்துக் கொண்டிருக்கும். நீண்ட காலமாக எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்த ஓய்வு ஊதியமும், ஆயுள் காப்பீட்டுத்தொகையும் கிடைக்கப்பெறுவீர்கள்.

## விருச்சிகம் :



(விசாகம், 4, அனுஷம், கேட்டை)

மனக்கட்டுப்பாடு மிக மிகத் தேவை. நாலில் உலவும் கேது, பாவ எண்ணங்களைத் தோற்றுவித்துப் பாவச் செயல்களைச் செய்யத் தூண்டுவார். பொது வாழ்வில் மதிப்பும் மரியாதையும் இழக்க வேண்டிவரும். தாயாரின் உடல்நலம் பாதிக்கப்படும். குடும்பச் சொத்துக்காரணமாக தகராறுகள் முற்றும். மாணவர்கள் படிப்பில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். இல்லையெனில் எதிர்காலம் உங்களது கையிலிருந்து நழுவிவிடும்.

எனினும் குரு நான்கிலும், சனி ஆறும் வீட்டிலும் வலம் வருவது மிகுந்த நன்மையைப் பயப்பதாகும். நோயிலிருந்து நிவாரணம் உண்டு. கடன் தொல்லைகள் குறையும். புதிய வாகனம் அல்லது வேறு வகையில் சொத்துக்கள் வாங்குவீர்கள். தொழில் நன்கு செழிக்கும். எதிரிகளின் தொல்லைகள் நீங்கும். பதவி உயர்வு காண்

பீர்கள். வட்டிவியாபாரம் நன்கு அபிவிருத்தியடையும்.

குடும்பத்தில் சுபகாரியங்கள் நடைபெறும். புனித இடங்களுக்குச் செல்லும் வாய்ப்பு உண்டாகும். வெளிநாட்டுப் பயணம் வெற்றிகரமாக அமையும். புதிய வாடிக்கையாளர்கள் அறிமுகப்படுத்தப்படுவார்கள்.

புகழ் ஓங்கும். உங்களது மாமியாரினால் நன்மை பல சந்திக்க இருக்கிறீர்கள்.

இராகுவும் பத்தாம் வீட்டிலிருந்து மேலும் மேலும் அபிவிருத்தியை வழங்குவார். புதிய தொழில் அல்லது வேலையைப் புதிய சூழ்நிலையில் ஏற்க வேண்டியவரும். வெளிநாட்டு வர்த்தகம் சிறப்படையும். தென்மேற்கு திசையிலிருந்து நிறைந்த அனுகூலம் உண்டாகும். எனினும் மாமியாரின் உடல்நலம் கெடக்கூடும்.

## தனுசு :



(மூலம், பூராடம், உத்திராடம் முதல்பாதம்)

சனி ஐந்தில் வர இருக்கிறுர். குழந்தைகளின் உடல் நலனிலும், படிப்பிலும் அதிகம் கவனம் செலுத்த வேண்டியிருக்கும். தாயாரின் மருத்துவச் செலவும் நாளுக்கு நாள் அதிகரிக்கும். பரிசுச்சீட்டின் மூலம் ஆதாயம் பெற இயலாது.

தொழிலில் இடையூறுகளும் தடைகளும் உண்டாகலாம். பண நெருக்கடி அதிகரிக்கும். கடன் தொல்லை பெருகும். விவசாயத்தில் ஆதாயம் குறையும், கால்நடைப் பராமரிபபுச் செலவுகள் அளவுக்குமீறி பெருகும். உளுநது, எள் போனற தானிய வியாபாரிகள் அதிக கவனமாக இருந்து செயல்பட்டாலொழிய இலாபம் காண இயலாது.

இராகுவின் ஒன்பதாம் வீட்டுச் சஞ்சாரத்தினால், நெடுந்தூரப் பயணம் பயனற்றதாகவும், பொருள் இழப்பிலும் முடியும். மாணவர்கள் மேற்படிப்பிலும், படிப்பிற்கான உதவித்தொகையைப் பெருவதிலும் பல இடையூறுகளைச் சந்திக்க வேண்டியுள்ளனர்.

எனினும் கேது மூன்றிலிருந்து மேற்சொன்ன இடையூறுகளையும் இன்னல்களையும் போக்க உதவுவார. இளைய சகோதரர்களினால் உதவி கிடைக்கும். விளையாட்டுத்துறையிலிருப்பவர்கள் முன்னேற்றம் காண்பார்கள்.

குரு மூன்றிலிருப்பது பொதுவாக நோக்குமிடத்து சில தொல்லைகளையும் உண்டாக்குவார். அலுவலகத்தில் மேலதிகாரிகளினாலும், உங்களுக்குக் கீழ் பணிபுரியும் வேலையாட்களினாலும் பலவிதமான இன்னல்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். எனினும் குருவின் பார்வை பட்ட இடங்களெல்லாம் செழிக்குமாதலால், நன்மைகளும் இன்பங்களும் ஏற்படத்தான் செய்யும் குடும்பத்தில் திருமணம், வளைகாப்பு போன்ற சுபகாரியங்கள் நிகழும். மூத்த சகோதரர் அல்லது பெரியவர்கள் உதவிக்கரம் நீட்டுவார்கள். பணப்புழக்கம் பெருகும். குடும்பத்தில் மகிழ்ச்சி நீடிக்கும்.

## மகரம் :



(உத்திராடம் 2,3,4 திருவோணம், அவிட்டம் 1,2)

இராகு கேது ஆகிய இரு கோள்களின் சஞ்சாரம் முறையே எட்டிலும் இரண்டிலும் நிகழ்வது நல்ல பலன்கள் விளைய இடமில்லை. குடும்பத்தில் பூசல்களும் மகிழ்ச்சி இன்மையும் பெருகும். வழக்கு வியாஜ்ஜியங்களிலும், வியாபாரத்திலும் இலாபம் காணுவது கடினம். கணவன்-மனைவி உறவில் சுமுக நிலை அரிதாகும். சிலர் மர்ம உறுப்புகளில் ஏற்படும் நோயினால் அவதியுற நேரிடலாம். மரண பயமும் ஏற்படலாம். வெளிநாட்டுப் பயணத்தில் எதிர்ப்பாராதத் தொல்லைகள் உருவாகலாம். வாகனம் ஓட்டும்போது மிகுந்த எச்சரிக்கையுடன் ஓட்டுங்கள். உங்களது தந்தையின் உடல்நிலை மன வருத்தத்தை உண்டாக்கலாம்.

'அர்த்தாஷ்டம சனி'யின் கால கட்டம் ஆரம்பமாகப் போகிறது. மனத்தூய்மை கெட வாய்ப்புள்ளது. பலராலும் வெறுக்கக்கூடிய எண்ணங்களில் மனம் அலைபாயும். அதனைச் செயப்படுத்தி பலவிதமான தொல்லைகளுக்கும் நீங்கள் ஆளாக நேரிடலாம்.

எனினும் இரண்டில் உள்ள குரு உமது பொருளாதார நிலையை மேம்படுத்துவார்.

குடும்பத்தில் மகிழ்ச்சியை உண்டாக்குவார்.

தொழிலிலும், அலுவலகத்திலும் எதிர்ப்பாராத ஆதாயம் அடையப்பெறுவீர்கள். குடும்பத்தில் ஒற்றுமையும், மகிழ்ச்சியும் ஓங்கும். திருமணம், குழந்தைப் பிறப்பு போன்ற சுபகாரியங்களில் மனநிறைவு உண்டாகும்.

வேலையற்றோர், நல்ல பணியில் அமர்த்தப்படுவார்கள். பதவி உயர்வு காரணமாக இடமாற்றமும் ஏற்படும். புதுமுயற்சிகள் வெற்றியளிக்கும்.

அரசியல்வாதிகள் சுறுசுறுப்புடன் செயலாற்றிப் புகழ் பெறுவார்கள்.

### கும்பம் :



(அவிட்டம் 3,4 சதயம், பூரட்டாதி 1,2,3)

கேதுவும் இராகுவும் முறையே உங்களது இராசியிலும், ஏழிலும் உலவுவதனால் மனஅமைதி என்பது மருந்துக்கு கூட கிடைக்காது எனலாம். குடும்பத்தில் உறவினர்களின் உடல்நிலை கவலைக்கிடமாகி மகிழ்ச்சி குன்றும். நண்பர்களிடையே விரோதம் வளரும். சிலர் வீட்டை விட்டு வெளியேறும் நிலை உருவாகலாம். தொழிற் பங்காளி உங்களை ஏமாற்ற முயலுவார். மனைவி அல்லது கணவனின் வெறுப்புக்கு நீங்கள் ஆளாகலாம். பயணம் தொல்லையில் முடியும்.

தந்தை மற்றும் குழந்தைகளின் மருத்துவச் செலவு பெருகும். மாணவர்களின் படிப்பில் பல தொல்லைகள் உருவாகும்.

குரு உங்களது இராசிக்கு வந்து விட்டார். பொருளாதார நெருக்கடி இருக்கலாம். பணிகளும் திட்டமிட்டபடி நடக்காமல் போகலாம். எனினும் எல்லா வகையிலும் பெருமளவு முன்னேற்றம் நிச்சயம் ஏற்படும். முன்னோர்களின் சொத்துக்கள் உங்களுக்குக் கிடைக்கப்போகிறது. வீட்டில் சுபகாரியங்கள் நடைபெற உள்ளது.

பங்குகளிலும், வைப்பு நிதியிலும் முதலீடு செய்வதன் மூலம் அதிகவருவாய் பெற வாய்ப்புள்ளது. மக்களுக்கு அன்றாடம் தேவைப்படும் பொருள்களின் விற்பனையாளர்கள் பெரும் பயன்பெறுவார்கள்.

சனியினது மூன்றும் வீட்டுச் சஞ்சார காலக்கட்டத்திலிருந்து தொல்லைகள் பல குறைந்து நன்மைகள் நாளும் பெருகும். எல்லா முயற்சிகளும் வெற்றியளிக்கும். வெளிநாட்டு வர்த்தகத் தொடர்பு ஆக்கம் தரும். எண்ணெய், சோப்பு, மற்றும் பிற டாய்லெட் சாமான்கள் கொண்டு செய்யும் வியாபாரம் செழிக்கும். நீண்டநாள் தொல்லைக் கொடுத்து வந்த பிரச்சனை தீரும்.

### மீனம் :



(பூரட்டாதி 4, உத்திரட்டாதி மற்றும் ரேவதி)

குரு பன்னிரண்டில் உலவுவதனால் குடும்பத்தில் வீண் விரையம், ஒற்றுமைக்குறைவும் உண்டாகும். மருத்துவச் செலவு அதிகரிக்கும். வரவேண்டிய பாக்கியை வசூலிப்பதில் பெரும் சிரமம் ஏற்படும்.

சொத்துத தகராறுகள் பெரிதாக வளரும். பாஸ்போர்ட், விசா பெறுவதில் இன்னல்கள் உண்டாகும். வாகனம் பழுதடைவதனால், பராமரிப்புச் செலவும், பழுது பார்க்கும் செலவும் பெருகும்.

சனியின் இரண்டாம் இடத்துச் சஞ்சாரமும் யோகம் அளிப்பதாக அமையவில்லை. கால் நடைகளின் மூலம் பெரும் பொருள் இழப்பு உண்டாகும். பால் வியாபாரம் செய்வோர் பயன் காணாது அவதியுறுவர்.

முகம், கண் மற்றும் மார்பு ஆகிய இடங்களில் நோய் உண்டாகலாம்.

பன்னிரண்டில் உலவும் கேது நல்லது கெட்டது ஆகிய இரு விதத்திலும் பலன்களை அளிப்பார். விஷ பயம் ஏற்படலாம். கணவன் மனைவி இடையே குழப்பமும் பூசலும் உண்டாகலாம். பணநெருக்கடி உண்டாகும். தூக்கத்தை இழக்க நேரிடலாம்.

எனினும் ஆறில் உலவும் இராகு சில நன்மைகளை உருவாக்குவார்.

எதிரிகளின் தொல்லைகள் குறையும். வழக்கில் வெற்றி ஏற்படும். வெளிநாட்டு வர்த்தகம் செழிக்கும். மின் சாதனங்களின் உற்பத்தி அதிகரிக்கும். அச்சாதனங்களின் விற்பனையிலீடுபட்டுள்ள வியாபாரிகள் மிகுந்த பயனடைவார்கள். தாமிரம் போன்ற உலோக வர்த்தகர்களும் உயர்வு பெறுவார்கள். பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ளவர்கள் பெருமதிப்பும் புகழும் பெற வாய்ப்புள்ளது. ✤

# நவக்கிரக வழிபாடுகளும் பலன்களும்

நவக்கிரகங்கள் வழிபாடு நம் நாட்டில் மிகச் சிறப்புற்றதாகும். தினமும் குலதெய்வ, இஷ்ட தெய்வ வழிபாட்டுடன் நவக்கிரக வழிபாடும் செய்வது நலந்தருவதாகும். கோயிலில் சென்று நவக்கிரக விக்கிரக வழிபாடு செய்ய இயலாதபோது வீட்டில் நவக்கிரகங்களை மனதில் எண்ணி மனத்தை நவக்கிரகங்களின் மீது ஒருமுகப்படுத்தி தியானிக்கவும்.

ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒரு நிமிட நேரம் வீதம் (குறைந்த அளவில்) நேரம் ஒதுக்கி ஒன்பது நிமிடமாவது தியானிக்கலாம்.

**1) சூரியன்**: அறிவு, செல்வம், கீர்த்தி, மகிழ்ச்சி, குழந்தை பாக்கியம் அருளும்.

**2) சந்திரன்** : வழக்குகள் வெற்றியும், தொழில் லாபங்களும் பெருகிவரும்.

**3) செவ்வாய்** : (அங்காரகன்) - மனப்பிரமை, பைத்தியம் தெளிதல், கௌரவம் கூடுதல், பொன் வரவு ஏற்படும்.

**4) புதன்** : ஆதாயம், வரவு, மத ஈடுபாடு, பிறருக்கு உதவும் மனப்பான்மை, உயர் கல்வி ஏற்படும்.

**5) வியாழன்** : (குரு) தான்ய லாபம், ஆலய நிர்மாணம், ஆலய வழிபாடுகள் புண்ணியச்செயல்கலில் ஈடுபாடு, திருமணம் கூடிவரல், ஆகியன ஏற்படும்.

**6) சுக்கிரன்**: (வெள்ளி) அயல்நாடு பயணம், பெண்கள் நட்பு, நல்லாசைகள் நிறைவேறல் வாகன லாபம், வீட்டு நலன் உண்டாகும்.

**7) சனி** : தேசத்தலைவனாக அல்லது மிக முக்கிய பலர் போற்றும் பெருமையடையலாம். கிராம, பூமி வளம் ஏற்படும், அதிகார வாழ்வு அமையும்.

**8) ராகு** : செயல்திறன் கூடும்,சுலபமான வெற்றிகள் கிட்டும், அதிர்ஷ்டம் கைகூடும். ஐஸ்வர்யம் கூடிவரும்.

**9) கேது** : பூமி, பொருள் சேர்க்கை, மனைவி மக்கள் மகிழ்ச்சி பெருகும். ஒன்பது கோள்களையும் ஒன்றன்பின் ஒன்றாக வணங்கிப் பின் இறுதியில் பொதுவான பிரார்த்தனை செய்தல் வேண்டும்.

சூரியன் சோமன் செவ்வாய்
சொற்புதன் வியாழன் வெள்ளி
காரிய சனி ராகு கேது
கடவுளர் ஒன்பருமர்
தாரியல் சக்கரத்தை
தரித்திரர் பூசித்தாலும்
பாரினிற் புத்திரர் உண்டாம்
பாக்கியம் நல்கும் தானே!

தினமும் காலை ஆறுமணி முதல் ஏழு மணி வரை, ஞாயிறன்று சூரிய ஹோரை, திங்களன்று சந்திர ஹோரை, செவ்வாயன்று செவ்வாய் ஹோரை, புதனன்று புதன் ஹோரை, வெள்ளியன்று சுக்கிர ஹோரை, சனியன்று சனி ஹோரையாக அமைந்துள்ள தன்மையைக் கவனித்தால் சூரிய உதயகாலம் எந்த ஹோரையில் உள்ளது என்று அறிந்து அந்த நாளை கிழமையாகப் பாவித்த தன்மை விளங்கும். ராகு, கேது, இரண்டும் சாயா கிரகங்கள் எனும் நிழல் கிரகங்களானபடியால் கிழமைகள் தரப்படவில்லை எனக்கருதவேண்டியுள்ளது. ஏழுநாட்களிலும் அந்தந்த ஹோரையில் அந்தந்த கிரகங்களை முதன்மைப்படுத்தி பிற கிரகங்களை வரிசைப்படுத்தி அத்துடன் ராகு, கேதுவையும் தியானம் செய்யலாம்.

நவநாயகர்கள் நலமளிப்பது உறுதி.

வெ. சுந்தரம் ஐயர் - பரமக்குடி.

# இறைவன் செய்த தந்திரம்

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்.

ஒரு பெரிய கோடீசுவரர்; அவருடைய மகன், பரம காலிகளாகிய குடியன், தடியன், வெறியன், மடையன் அசடன்களுடன் கூடித்திரிகின்ருன்; அந்தக் காலிகள் சொன்னபடி கேட்கின்ருன்; தனது பெருந்தன்மையை நினைக்கவில்லை. குடியன் தடியன்களுக்கு அடிமையாகி அவர்கள் கைப்பம்பரமாகச் சுழல்கின்ருன்; தந்தை அது கண்டு வருந்துகிருர். தன்னிடமுள்ள எல்லையற்ற நிதியை நியாய முறையில் பெறத்தெரியாது ஒரு ரூபாய்க்குப் பலரிடம் போய்த் தன் மகன் தொங்குகிறதைக் கண்டு இரங்கினார். அவர் ஒரு தந்திரம் புரிந்தார். அது என்ன தந்திரம் தெரியுமா? அழகான தந்திரம்; அற்புதமான தந்திரம்.

ஒருநாள் மெல்ல அடக்கியாளுகின்ற அந்தக் குடியனையும், தடியனையும், வெறியனையும், மடையனையும் தனியே அழைத்தார். அவர்கள் பயந்தே போனார்கள். இவர் எதிரிலேயே வரத்தகுதியற்றவர்கள், மிகக் கேவலமானவர்கள். மிக உயர்ந்த நிலையில் உள்ள இவர் நம்மை ஏன் அழைக்கின்ருர் என்று கருதினார்கள். ஒரு வேளை அவருடைய மகனை நாம் கெடுக்கின்ருேம் என்ற சினத்தால் நம்மை கட்டிவைத்து அடிக்கப்போகின்ருரோ? என்ன தண்டனை தருவாரோ? இன்றைக்கு என்ன கெட்ட காலமோ என்றெல்லாம் எண்ணி நடுங்கிப் போனார்கள். கால்நடுங்க கை நடுங்க மெல்ல வந்து அக்கோட்டீசுவர பிரபுவுக்கு முன்னால் நின்ருர்கள்.

அவர் அவர்களைக் குளிர்ச்சியாகப் பார்த்தருளினார். அவருடைய அருட்பார்வை அவர்களுடைய அச்சத்தை அகற்றியது. சிறிது திடம் பெற்ருர்கள்.

நீங்கள் உணவுக்கும் உடைக்கும் மிகுந்த சிரமப்படுவதாக நான் உணர்கின்றேன். இங்குமங்குமாக நீங்கள் அலைய வேண்டாம். நமது சிங்கார அரண்மனையிலேயே உங்களுக்கு வேலை தந்துவிட்டேன். ஆளுக்கு 1000 ரூபாய் சம்பளம். உங்களுக்கு இங்கேயே சாப்பாடு துணிமணி எல்லாம் நானே தருவேன். கவலையற்று இங்கே வேலே பார்த்துக்கொண்டு இருங்கள் என்ருர். வெள்ளிக்கிண்ணங்களில் குங்குமப்பூ இட்டுக் காய்ச்சி பால் தந்தார். இவர்கட்கு கனவா நனவா என்று புரியவில்லை. நமக்கு மாதம் பதினைந்து ரூபாய் கூட யாரும் தரமாட்டார்களே; உதவாக்கரைகள் என்று நம்மை யாருமே வேலைக்கு வைத்துக் கொள்ள மாட்டார்களே. நமக்கு இன்று பதினோராம் இடத்திற்குக் குரு வந்துவிட்டார். இன்றுடன் நமது கவலை ஒழிந்தது என நினைத்தார்கள். அவர் அடிமலர் மீது வீழ்ந்தார்கள். 'நாங்கள் உய்வு பெற்ருேம்' என்ருர்கள். உடனே அத்தலைவர் அவர்கட்கு நல்ல பட்டு வேஷ்

## நவக்கிரகங்களுக்கு உகந்த ஸ்தலங்கள்

| | |
|---|---|
| 1. சூரியன் | - சூரியனார்கோவில், திருக்கண்டியூர், வீரட்டம், திருப்புறவார், பனங்காட்டூர், கொனாரக் (ஒரிஸா) |
| 2. சந்திரன் | - திங்களூர், திருப்பதி. |
| 3. அங்காரகன் (செவ்வாய்) | - பழனி, வைத்தீஸ்வரன்கோவில், திருச்சிறுகுடி. |
| 4. புதன் | - மதுரை, திருவெண்காடு |
| 5. குரு (வியாழன்) | - திருச்செந்தூர், ஆலங்குடி, திருவலிதாயம் தென்குடித்திட்டை |
| 6. சுக்கிரன் | - ஸ்ரீரங்கம், கஞ்சனூர், திருநாவலூர் |
| 7. சனி | - திருநள்ளாறு, குஞ்சனூர் (சின்னமனூர்), பழுவூர் (திருச்சி) |
| 8. ராகு | - திருக்காளத்தி, திருநாகேஸ்வரம் பட்டீஸ்வரம் |
| 9. கேது | - திருக்காளத்தி, கீழப்பெரும்பள்ளம் (தஞ்சை) |

திருமதி. கமலவேணி தனபதி - திருச்சி.

டிகள் தந்து என்னிடம் ஊழியம் புரிகின்ற நீங்கள் சிறப்பாக இருக்கவேண்டும். இனி ஒழுங்காவும், பெருந்தந்மையாகவும் இருங்கள்! என்றுர். நல்லது என்றுர்கள்.

அதுமுதல் அவர்கள் கண்ட இடங்களில் அலைவதில்லை. குடி, வெறி, களவு, கொலை, முதலிய தீமைகளை விடுத்தார்கள். அவருடைய அரண்மனையில் இருந்து அலுவல் பார்த்தார்கள். எஜமானனுக்கே நேர் அடிமையாகி விட்டார்கள். அதுமட்டுமல்ல. முன் தாங்கள் கைப்பம்பரமாய் ஆட்டிய எஜமானனுடைய புதல்வனுக்கும் தாம் அடிமைகள் என்பதை உணர்ந்தார்கள்.

இவ்வாறு தன் மகனை அடிமைகொண்டு அலைக்கழித்த அப்புல்லர்களைத் தனக்கு ஏவலர்களாகச் செய்து தன் மகனுக்கும் அடங்கி நடக்குமாறு செய்துவிட்டார் அத்தலைவர்.

இந்தத் தந்திரத்தையே இறைவன் என் விஷயத்தில் கையாண்டார்.

இறைவனுடைய புதல்வன் நான். மெய், வாய், கண், செவி, நாசி, மனம் முதலிய புல்லர்களுடன் கூடி நான் அவமே திரிந்து அலைந்தேன். என் அப்பனை நாடாது அலைந்தேன், உழன்றேன்; என் அப்பன் அகிலோக சக்கரவர்த்தி என அறியாது கெட்டேன்.

எம்பெருமான் என்ன செய்தார்? என்ன அடக்கியாட்டி வைத்த மனம் முதலிய அந்தக் கரணங்களையும் கண் முதலிய பொறி புலன்களையும் அவர் தனக்கு நேரே அடிமையாக்கிக் கொண்டார்.

சிந்தனையை அவருக்கே ஆக்கிக்கொண்டார். என் கண்களை அவர் திருவடிக்கே ஆளாக்கிக் கொண்டார். என் கரங்களை அவர் தன்னையே வணங்குமாறு செய்தார். வம்பு வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்த என் வாக்கை அவருடைய மணி வார்த்தைகளையே பேசுமாறு செய்துவிட்டார். இவ்வாறு ஐம்புலன்களும் மகிழும் படி இறைவன் வெளிப்பட்டுத் தோன்றி ஆட்கொண்டார்.

அன்றியும் என் உள்ளே புகுந்து அமுதத்தை நிறைத்துத் தேக்கி அருள் புரிந்தான்; இறுதியில் அவனையே எனக்குத் தந்துவிட்டான். அங்ஙனம் தந்த ஆண்டவன் கருணை மலையாகவும் ஒப்பற்ற ஒளிமயமாகவும் விளங்குகின்றுன். அதனால் எனக்கு இன்பம், துன்பம், இகழ், புகழ், இறப்பு, பிறப்பு, நினைப்பு, மறப்பு என்ற இரட்டைகள் இல்லாமற்போய்விட்டன.

இந்தக் கருத்தையே மாணிக்கவாசகர் கூறுகிறுர்.

"சிந்தனை நின்றனக்காக்கி
நாயி னேன்றன்
கண்ணினைநின் திருப்பாதப்
போதுக் காக்கி
வந்தனையும் அம் மலர்க்கே ஆக்கி
வாக்குன்
மணி வார்த்தைக் காக்கி ஐம்புலன்
களார
எந்தனை யாட் கொண்டுள்ளே
புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே
உன்னைத்
தந்தனை செந்தாமரைக்
காடனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித்
தனிய னேற்கே"
-திருச்சதகம்



## இறைவன் தன்மைகள்

வைணவ சம்பிரதாயத்தில் இறைவனின் ஐந்து நிலைகளுக்கு நீரின் ஐந்து தன்மைகளை உவமையாகக் கூறுவர்.

1) அந்தர்யாமித்வம் அருவநிலை : மறைந்திருந்து அருள் பாலிக்கும் தன்மை. பூமிக்குள் மறைந்திருக்கும் நீரைப்போன்றது.

2) பரத்துவம் வியாபகம் : எங்கும் நிறைந்திருந்து அருள் பாலித்தல், மழைநீர் போன்றது.

3) வியூகம் அணிவகுத்தல் : அணிவகுத்து நின்று அருள் பாலித்தல். திருப்பாற்கடல் போன்றது.

4) விபவம் - மனித உருவில் காட்சியளித்தல் உலகில் அவதாரமெடுத்து அருள்பாலித்தல். ஆற்றுநீர் போன்றது. ஓடிக்கொண்டேயிருத்தல்.

5) அர்ச்சாவதாரம்-சிலை உருவம் : கோயில்களில் கற்சிலைகளாக இருந்து அருள்பாலித்தல் அக்கோயில்களிலுள்ள குளத்து நீர் போன்றது. தேங்கு நிற்கும் நீர்நிலைகள்.

தொகுத்தவர்: திருமதி. சு. பொன்னம்மாள் - புத்தூர்.

# இறைவன் இருப்பது எங்கே?

திருமதி. வஸந்தா வேணுகோபால் - சென்னை.

"கடவுள் எங்கே, எங்கே, கண் எதிரில் வந்தால் தான் கடவுளை நம்புவேன்" என்று சிலர் கேள்வி கேட்கிறார்கள். பக்தர்கள் சிலருக்குக் கூட சிலசமயம் துன்பப்படும் நேரத்தில் கடவுள் இருக்கிறாரா என்ற ஐயம் ஏற்படுவதும் உண்டு. கடவுளைப் பார்க்கும் அளவிற்கு நமக்கு ஞானக்கண்களோ, ஞானமோ கிடையாது. அவரது அன்பையும், திருவருட் கடாட்சத்தையும் நாம் உணரத்தான் முடியும். கடவுள் எங்கு இருக்கிறார் என்பதைக்கூறுவதே இந்தப் புனிதமான கட்டுரையின் நோக்கமாகும்.

### சத்தியம்!

உள்ளத்தில் உள்ளதை உள்ளவாறே உரைத்தலே உண்மையாகும். அதுதான் சத்தியம். மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒன்றுபட வாழ்வதே சத்தியம். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுதல் மிகமிகத் தவறு. 'சத்தியமேவ ஜயதே' அதாவது வாய்மையே வெல்லும் என்பதை நிரூபித்துக் காட்டியது பவித்ரமான அரிச்சந்திரனின் கதை. அந்த சத்தியத்தில் இறைவன் இருக்கிறார். (இன்னொருவர் தர்மபுத்திரர் ஆவார்)

### அறம்!

"வீடுவரை உறவு, வீதிவரை மனைவி, காடுவரை பிள்ளை, கடைசிவரை யாரோ" என்று கவிஞர் பாடி வைத்தார். இறந்தபின்பும் நம்மைப்பின்பற்றிவருவது நாம் செய்த புண்ணிய பாவங்களேயாகும். எனவே இயன்றவரையில் தர்மம் செய்ய வேண்டும். முடிந்தபோது சிற்சில உதவிகள் கூட பெரிய தருமமாகும். அந்தத் தர்மத்திலும் கடவுள் இருக்கிறார். கர்ணனை நாம் இன்றும் நினைப்பது அவனது கொடைத்திறனால் மட்டும்தானே.

### மனம்!

பகவத் கீதையில் ஸ்ரீகிருஷ்ணர் நான் எல்லா ஊழியர்களிடத்திலும் இருக்கிறேன் என்று கூறியிருக்கிறார். "தூணிலும் உளன் துரும்பிலும் உளன்" என்பதை நிரூபித்தவர் ஸ்ரீ நரசிம்மர். ஒவ்வொரு இதயத்திலும், ஆன்மாவிலும் இறைவன் இருக்கிறார் எனவே நாம் யாரையும், பழிக்கவோ, அவமானப்படுத்தவோ கூடாது. கஸ்தூரிமான், தனது உடம்பின் உள்ளே உள்ள நறுமணத்தை புரிந்து கொள்ளாமல், வாசனையைத் தேடித்தேடி ஓடிக் கொண்டிருக்குமாம். அஃதே போல் நாம், நம் இதயத்துள் உறையும் இறைவனைத் தெரிந்து கொள்ளாமல் எல்லா இடங்களிலும் தேடித் தேடிக் களைக்கிறோம். இது எவ்வளவு அசட்டுத்தனம். எனவே இதயத்தில் உள்ள இறைவனை உணர முயற்சி செய்ய வேண்டும். மனத்துக்கண் மாசில்லாமல் இருந்தால்தான் அந்த மாயக்கண்ணன் மனத்தில் குடியேற வருவான்.

### பிரார்த்தனை!

சிலர் சொல்வார்கள் நான் நிறைய செலவுகள் செய்து பூஜை செய்கிறேன். அந்த பூஜை செய்கிறேன் இந்த பூஜை செய்கிறேன் என்று அளந்து கொண்டிருப்பார்கள். ஒருமுறை கடவுள் அனுக்கிரஹம் கிடைக்கவில்லை எனில் கடவுளையே தூஷிப்பார்கள். இறைவனுக்கு எல்லோரும் ஒன்றுதான். பத்து பைசா கற்பூரம் ஏற்றுபவனும் பத்து கோடி உண்டியலில் போடுபவனும் இறைவனின் எதிரில் சமம்தான். கடவுளுக்கு பேதங்கள் கிடையாது. கடவுள் தானே நம் எல்லோருக்கும் தாய்தந்தை. பெற்றவர்கள் தாங்கள் பெற்ற குழந்தைகளிடம் பேதம் பிரித்துப் பார்ப்பார்களா? நமது பூர்வ ஜென்ம வினைகளால்தான் நமக்குத் கஷ்டம் வருகிறது. அதற்கு இறைவனிடம் பிரார்த்தனை செய்தால், அந்தக் கஷ்டத்தைத் தாங்கும் சக்தியை நமக்குக் கொடுத்து, அந்த தீமைகளை விரட்டுவார். பிரார்த்தனை என்றால் உண்மையான பிராத்தனையாக இருக்கவேண்டும். உள்ளத்திலிருந்து; உண்டாகி, கண்கள் பனிக்க, கண்ணீர் பெருக இரு கரங்களையும் தலைமேல் குவித்து "அப்பா, நீ இல்லை என்றால் நான் எங்கே? நீயே கதி, நீயே சரணம், எனக்கு வேறு புகலிடம் இல்லை. என்னைக் காப்பாற்று" என்று கதறி, உருகி, ண்ணீர் பெருக வேண்டினால்,

கடவுள் சட்டென்று கண்டிப்பாக அருள்புரிவார். இதில் சந்தேகமேயில்லை. உண்மையான நல்ல பிரார்த்தனைக்கு, கடவுள் காற்றினும் கடுகி ஓடிவந்து நமக்கு திருவருட்புரிவார். இந்த பிரார்த்தனையிலும் இறைவன் உள்ளார்.

### தீய குணங்களைக் களைதல்!

"அழுக்காறு, அவா,வெகுளி, இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்" என்ற திருக்குறள்படி பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொற்கள் இவற்றை மெல்ல மெல்ல விலக்கி அறவே நீக்கவேண்டும். இந்தத் தீய குணங்கள் நீங்கினால் நாம் படிப்படியாக நல்லவர்களாகி வல்லவர்களாக மாறுவோம். "தீயவை தீய பயத்தலால் தீயவை தீயினும் அஞ்சப்படும்'' என்றார் திருவள்ளுவர். எனவே தீய குணங்களை அறவே விட்டொழிக்கவேண்டும். நமக்குப் பகவான் கொடுத்ததை மகிழ்ச்சியோடு ஏற்று, நன்றி சொன்னால், கடவுள் மேன்மேலும் நமக்கு நன்மைகள், செல்வங்கள் கிடைக்க அருள்புரிவார். நல்ல குணங்களின் இருப்பிடமே இறைவன்.

### கடமைகள்!

"மாதா, பிதா, குரு தெய்வம்", "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" இவையெல்லாம் தெரியாதவர்களே கிடையாது. ஆனால் எத்தனை பேர்கள் இதனைக் கடைப்பிடிக்கிறார்கள்? பெற்றவர்களை பாரமாக எண்ணி, முதியோர் இல்லங்களில் அனாதையாக அனுப்பிவிட்டு நிம்மதியாக வாழும் எத்தனையோ கல்நெஞ்சக்காரர்கள் இக்காலத்தில் பெருகி வருகின்றனர். அவர்கள் கடவுளுக்குக் கோயில்கட்டி, கும்பாபிஷேகம் செய்தாலும் இறைவன் இரங்குவாரா? கண் எதிரில் தெரியும் தாய்தந்தை என்ற தெய்வங்களை நிராதரவாகத் தவிக்கவிட்டு, உணவுக்கும் உடைக்கும் திண்டாட வைத்துவிட்டு, தெய்வத்திற்குச் செய்தால் அதைத் தெய்வம் ஏற்குமா? பகவான், கிருஷ்ணன் "முதலில் கடமையைச் செய். பலனை எதிர்பாராதே" என்கிறார். பலன் கண்டிப்பாக காலம் கனிந்து கிடைக்கும். எனவே "செய்யும் தொழிலே தெய்வம்" என்று எண்ணி, நமது கடமைகளைக் குறைவறச் செய்தால் கடவுள் வருவார்.

தீமைகளை விரட்டி, நல்ல குணங்களைக் கடைப்பிடித்து, முடிந்தவரையில் ஆலயங்களில் சென்று, தூய்மையான இதயத்துடன் இறைவனை வழிபட வேண்டும். நல்ல நல்ல புத்தகங்களைப் படிக்க வேண்டும். மற்றவர்களிடம் பேசும்போது நல்ல விஷயங்களையே பேச வேண்டும். நமக்குத் தெரிந்த நல்லவைகளை மற்றவருக்குச் சொல்ல வேண்டும். ஆபத்துக் காலத்தில் இயன்றவரை மற்றவர்களுக்கு உதவ முன்வர வேண்டும். சுயநலவாதிகள் இல்லாமல் பிறர் நலம் பாராட்ட வேண்டும். இவ்வாறு நாம் புனிதமான வாழ்க்கையைத்தூய்மையாக வாழ்ந்தால், இறைவனே இரங்கி நமக்கு சகல உதவிகளையும் புரிந்து சங்கடங்களைச் சக்கரத்தால் விரட்டி விடுவார். கண்ணிலே அன்பிருந்தால் கல்லிலே தெய்வம் கண்டிப்பாக வரும். அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிரம்பியுள்ள பரம்பொருள், சார்வபௌமன். சகலமும் அவனே. அவனே சரண் என பிரார்த்தனை செய்து ஏழுமலை வாசன் ஸ்ரீநிவாசனை வணங்கி அவன் திருவருட்கடாட்சத்திற்கு பாத்திரமாவோம்.



## திருவருள் புரிவாயே!

மலையப்ப ஸ்வாமியே நிலையில்லா வாழ்விலே
மலைபோல் வந்த துயர் துடைத்துவிடுவாயே
மகிழ்ச்சிதனை அடைந்திடாமல் ஏங்குகின்றேனே
மலர்ச்சிதனை அளித்திடநீயும் தயங்குகின்றாயே.

திருப்பதி மலையிலே நின்றருள் புரிகின்றாய்
திருமலை வருவோரை காத்து நிற்கின்றாய்
திருவருட் புனலும்நீ அறிவுக்கனலும்நீ
திருவருள் புரிந்திடவே விரைந்து வருவாயே.

அறியாமல் நானும் பாவம்பல புரிந்திட்டேன்
அறியாமை என்னும் நரகத்தில் புகுந்திட்டேன்
அங்கும் இங்கும் எங்கும் இருக்கின்றாய்
அன்றும் இன்றும் என்றும் துணைநிற்பாய்.

வஸந்தா வேணுகோபால் - சென்னை.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினாறும் அத்தியாயம்

## தெய்வாஸுர ஸம்பத் விபாகயோகம்

(தெய்வத்தன்மையும் அரக்கத்தன்மையும்)

உமைபிரியன்

பகவான் சொன்னது :

(முதல் மூன்று செய்யுட்களிலும் தெய்வ இயல்பு கொண்டவனிடம் குடிகொண்டுள்ள குணங்களைப் பட்டியல் போட்டு பகவான் கிருஷ்ணர் அர்ச்சுனனுக்குக் கூறுகிறுர்)

அபயம் ஸத்த்வஸம்சுத்திர்ஞான
யோகவ்யவஸ்திதி: ।
தானம் தமஸ்ச யக்ஞஸ்ச
ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ॥ (1)

"பயமின்மை, உள்ளத்தூய்மை, ஞானம் மற்றும் யோகத்தில் மன உறுதி, ஈகை, ஐம்புலன்களை அடக்கும் திறன், வேள்வி, சாத்திர அறிவு, தவம், நேர்மை"

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக:
சாந்திரபைசுனம் ।
தயா பூதேஷ்வலோலுப்த்வம்
மார்தவம் ஹ்ரீர சாபலம் ॥ (2)

"பிறர்க்குத் தீங்கு செய்யாமை, உண்மை, கோபமின்மை, துறவு, அமைதி, புறங்கூறுமை, பிற உயிர்களிடத்து கருணை, பிறர் பொருளை விரும்பாமை, இனிமை, வெட்கம், மனச்சலிப்பு கொள்ளாமை"

தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்
ரோஹோ நாதி மானிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய
பாரத ॥ (3)

"தைர்யம், பொறுமை, மன உறுதி, தூய்மை, வஞ்சகமின்மை, செருக்கில்லாமை ஆகிய இக் குணங்களே தெய்வ இயல்புடன் பிறந்திடும் மனிதர்களிடம் சாதாரணமாகவே காணப்படும்."

[மனிதன் பிறக்கும்போது பொதுவாக நல்லவனாகத்தான் பிறக்கின்றுன். வளர வளர அவனிடம் அசுர இயல்புகள் பெரிதும் குடிகொண்டு விடு



கின்றன. மனிதன் இறுதி வரை நல்லவனாக விளங்கிடும்போது அவனிடம் மேற்கூறிய 26 நற்குணங்கள் இயல்புகள் வந்தமைகின்றன. இவை தெய்வ குணங்களாகப் போற்றப்படுகின்றன. இந்த 26 குண இயல்புகளில் பல எல்லோர்க்கும் தெரிந்த ஒன்றுகும். அச்சம் எனும் உணர்வு அறியாமையால் வருவது. கடமையை இறைப்பணியர்க மேற்கொள்பவன் வாழ்க்கையில் எதற்கும் அஞ்சமாட்டான். இதனை இறைவன் தன் அபய கரத்தால் தன் பக்கதர்களைக் காத்திடும் அவன் திருக்கோலமே காட்டிடும். தூய உள்ளம் என்பது ஆத்மாவின் தனித்தன்மை. ஆத்மா தூய்மையாக விளங்கிடும்போது அமைதி, அன்பு, ஆசையற்று இருத்தல் போன்ற நற்பண்புகள் வந்து கூடிடும். எது உண்மை, எது பொய், எது அழியாதது, எது அழியும் என்ற தத்துவமனத்தெளிவை தருவது ஞானம். அந்த 'ஞான' அறிவுடன் தன் வாழ்க்கையை மேற்கொள்வது ஒருவனுக்கு யோகமாகிறது. யாகம் அல்லது வேள்வி என்பது, தனக்கு அளிக்கப்பட்ட, தான் மேற்கொண்ட பணிகளை சரிவர செய்தலே யாகும். இது போது தன் எண்ணங்களை, தன் உணர்வுகளை அப்பணியிலே முழுமையாக அர்ப்பணித்தல் பலியாக்குதலே யாகமாகும். சாத்திரம் படித்தல் என்பது உலகாயுத பயன்களுக்காகப் பயன்படும் ஏட்டுப்படிப்பு அல்ல. வாழ்க்கை உண்மையினை, இயற்கையின் ஆற்றலை, இறைவனின் பெருமையை உணர்த்திடும் சமய தத்துவ விளக்கங்களே உண்மையான சாத்திரங்களாகும். அவற்றைப் பயில்வதே, அறிந்துகொள்வதே மனிதனின் மேம்பாட்டிற்கு வழிவகுக்கும். துறவு அல்லது தியாகம் என்பது மற்றுமொறு அரிய பண்பாகும். தியாகத்தில்தான் மனிதனின் மாண்பு தெரியவரும். தாய் தன் தியாகத்தால் ஒரு வம்சத்தை உருவாக்குகிறுள். ஆசிரியர் தன் அறிவு தியாகத்தால் ஒரு நல்ல மாணவ சமுதாயத்தை ஏற்படுத்துகிறுர். இத்தியாகத்தால் ஆசிரியர்களின் அறிவு மேலும் சிறந்தோங்குகிறது என்பதும் மற்றுமொரு சிறப்பாகும். மனிதனின் 'உழைப்பு தியாக'த்தால் ஒரு நல்ல சமுதாயம் உருவாகுகிறது. ஆகவே தியாகம் அதாவது தன்னிட மிருப்பதை பிறர்க்குப் பயன் கருதாது தரும் இயல்பு, தெய்வ இயல்பாக மதிக்கப்படுகிறது. மனத்திட்பம் அல்லது மனச்சலிப்பு இல்லாமை மனிதரிடம் இருக்க வேண்டிய ஒரு முக்யமான குணமாகும். மனம் சஞ்சலப்படும் போது உடல் எந்த விதமான ஆக்கப்பூர்வமான செயலையும் மேற்கொள்ளாது. விளைவுகள் ஆபத்தையே தரும். தகுந்த பயிற்சியினால் மட்டுமே, மனக் கட்டுப்பாட்டினால் மட்டுமே இந்த இயல்பை வளர்த்துக் கொள்ளமுடியும். மற்றுமொரு குணம் 'தைர்யம்' அச்சம் என்பது தனக்குள் வரும் உணர்வு. தைர்யம் என்பது வெளிச்சூழ் நிலையில் தான் மேற்கொள்ள வேண்டிய உணர்வாகும். அச்சம் மனச் சாட்சியை பொறுத்தும், 'தைர்யம்'. வெளி உலகத்தைப் பொறுத்தும் பெறுவது ஆகும். ஆகவே மேற்கூறிய வாறு விளக்கப்பட்ட குணங்களுடன் கூடிய 26 குண இயல்புகள்- உணர்வுகள் கொண்டவர்கள் இறைவனுக்குச் சமமாகக் கருதப்படுவர். இறைவனாகவே கொண்டாடப்படுவர்.]

தம்போ தர்போ அபிமானஸ்ச
க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அக்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த
ஸம்பதமாஸுரீம் ॥ (4)

"பார்த்தா! (அர்ச்சுனா) பகட்டு, இறுமாப்பு, தற்பெருமை, கோபம், கடுமை, அறியாமை ஆகியன யாவும் அசுர இயல்பு கொண்டு பிறந்திடும் மனிதர்களிடம் இயல்பாக விளங்கிடும்."

[முதன் மூன்று செய்யுட்களில் இறை இயல்புகள் கூறிய பின்பு, அவற்றிற்கு நேர்மாறுன அரக்க இயல்புகள் இந்தச் செய்யுளில் கூறப்படுகிறது. நல்ல இயல்புகள் 26 என்று பட்டியல் போட்டு கூறிய பகவான் அசுர இயல்புகள் 6 மட்டுமே என்று கூறும்போது, ஒரு துளி நஞ்சே ஒரு குடத்து பாலை நஞ்சாக்குவது போல இந்த ஆறு குணங்களே மேற்கூறிய 26 குணங்களை அழித்திடும் ஆற்றல் பெறுகின்றன என்பதை பகவான் கூறுமல் கூறுகிறுர். தன்னிடம் இயலாததை உள்ளதாகக் கூறிக்கொள்ளும் பகட்டு, தன் குல, செல்வ கல்வி நிலையால் பெறப்படும் கர்வம், தற்பெருமை, எளிதில் நண்பனையும் எதிரியாக்கிடும் கோபம், இன்முகம் காட்டாது - அன்பு கொண்டு விளங்காது சிடுசிடுவென விளங்கிடும் கடுமை, நல்லனவற்றை தீயனவாகவும், தீயனவற்றை நல்லவையாகவும் கருதிச் சொல்லாலும், செயலாலும் விளங்கிடும் அறியாமை ஆகியனவே மனிதனை மிருகமாக்கி விடுகின்றன. இவற்றை தன்னிடமிருந்து ஒருவன் விலக்கினாலொழிய, அவனிடம் மனித நேயமோ அதன்மூலம் இறை உணர்வோ தோன்றிடாது.]

தைவீ ஸம்பத் விமோக்ஷாய
நிபந்தாயாஸுரீ மதா ।
மா சுசு: ஸம்பதம் தைவீமபிஜாதோ
அஸி பாண்டவ ॥ (5)

"தெய்வ சம்பத்து (இயல்புகள் - குணங்கள்) மோக்ஷத்திற்கும்,

அசுர சம்பத்து பந்த பாசத்திற்கும் இட்டுச் செல்வனவாகக் கருதப்படும். பாண்டவா! வருந்த வேண்டாம். நீ தெய்வ சம்பத்து உடையவனாகப் பிறந்துள்ளாய்."

[இறை உணர்வுகளே மனிதனை மகானாக மாற்றுகின்றன. அம்மகானே தன்னுடைய தியான, யோக ஞான பயிற்சிகளினால் அவ் இறைவனைக் காணும் தகுதி பெறுகின்றான். இந்த குண இயல்புகள் அர்ச்சுனனிடம் இருப்பதால் தான், அவன் பகவானைக் காணும், உரையாடிடும் விவாதித்திடும் ஆற்றலைப் பெறுகின்றான். இதற்கு நேர்மாறாக அசுர, இயல்புகள் தன்னைக் கொண்ட மனிதனை ஆசைகளுக்கும், பற்றுகளுக்கும் ஆட்படுத்தி, அவனிடம் இறைச்சிந்தனை இல்லாது செய்து விடுகின்றன. இதன் விளைவாக பிறப்பு இறப்பு என்னும் சுழலிலே மாட்டிக்கொண்டு பிறவிதோறும் அல்லலுறுகின்றான்.]

த்வெள பூதஸர்கெள லோகே அஸ்மின்
தைவ ஆஸுர ஏவச |
தைவோ விஸ்தரச: ப்ரோக்த
ஆஸுரம் பார்த்த மே ச்ருணு || (6)

"பார்த்தா தெய்வ இயல்புகள் கொண்ட தெய்வீகம் மற்றும் தீய இயல்புகள் கொண்ட அசுரம் என்று இருவகையான பிறவிகள் இந்த மண்ணிலே உண்டு. (இதுவரை) தெய்வ இயல்புகள் பற்றி விரிவாகக்கூறப்பட்டன. அசுர இயல்புகளின் தன்மைகளை இனிமேல் என்னிடமிருந்து நீ கேட்பாயாக."

[அசுர இயல்புகள் எந்த வகையில் ஒரு மனிதனுக்கு பகையாக அமைந்து அவனை பலவகைகளில் துன்புறுத்தும் என்பதை விரிவாகக் கூறி, அதன் முகத்தான் அவனைத்திருத்திட பகவான் இங்கு ஒரு வாய்ப்பாக அமைத்துக் கொண்டு அறிவுரை கூறுகிறார்.]

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜனா
ந விதுராஸுரா: |
ந செளசம் நாபி சாசாரோ
ந ஸத்யம் தேஷு வித்யதே || (7)

"செய்யவேண்டிய நல்ல செயல்களையும், செய்யக்கூடாத தீய செயல்களையும் அசுர இயல்புகள் கொண்டோர் அறியார். அவர்களிடத்து தூய்மையோ, நல்ல ஒழுக்கங்களோ இருக்காது. மேலும் நல்ல வாய்மையும் விளங்காது."

[செயல்கள் அல்லது வினைகள் இரண்டு வகைப்படும். அவை நல்லன, தீயனவாகும். நல்ல செயல்கள் மனசாட்சிக்கும், சமுதாயத்திற்கும் விரோதமாக் - பகையாக அமையா. செயல்கள் அறத்திற்கு உட்பட்டு விளங்குவதால் அவை நல்லன வற்றையே வழங்கும் இதற்கு நேர்மாறாக அமைவன தீயச் செயல்கள். அறத்திற்கு எதிராக விளங்குவதால் அதனால் விளையும் பயன்கள் கெடுதிக்கே இட்டுச் செல்லும். ஆகவே செயல்களின் பாகுபாட்டை அறியாதோ அல்லது அறிந்தோ தீய செயல்களையே செய்வர் அசுர இயல்பு கொண்டவர்கள். இதனால் அவர்களிடத்து மனத்தூய்மை இருக்காது தூய்மை-சுத்தம் இல்லாத இடத்தில் எவ்வாறு அசுத்தம் அழுக்கு சேருமோ அவ்வாறு தூய்மை இல்லாத அவர்ளிடம் நல்ல பழக்க வழக்கங்கள் அமையா. ஒழுக்கமுடைய நல்ல செயல்களை மேற்கொள்ளார். இதனால் வாய்மை என்னும் சத்தியம் அவர்களிடம் இருக்காது. எப்போதும் பொய், ஏமாற்றுதல் போன்ற தீய குணங்களே மிக்கு விளங்கும்.]

அஸத்யமப்ரதிஷ்டம் தே
ஜகதாஸுரநீச்வரம் |
அபரஸ்பரஸம்பூதம் கிமன்யத்கா-
மஹைதுகம் || (8)

"(அசுர இயல்பு கொண்டோர் பார்வையில்) இந்த உலகத்தில் உண்மை என்றும் ஏதும் இல்லை. கடவுள் இல்லை. காமத்தை அடிப்படையாகக் கொண்டு ஆண்பெண் உடலுறவால் இந்த உலகம் இயங்குகிறது. இதைத்தவிர இந்த உலகத்தில்வேறு ஒன்றும் இல்லை."

[காம உணர்வே இந்த உலகின் இயல்பு என்று கூறுவோர் உலகியல் இன்பம் துய்ப்பது மட்டுமே இந்த மனிதப் பிறவியின் பயன் என்று எண்ணுவர். இவர்கள் 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று உண்டு, உறங்கி மகிழ்வது தவிர வேறு எந்தவிதமான இலட்சியமும் மனிதப்பிறவிக்கு இல்லை என்று நினைப்பர். அந்த நினைப்பில் மூழ்கி இருப்போர்க்கு இந்த உலக வாழ்க்கைக்கென ஒரு நியதி, தர்மம் என்பதையோ இந்த உலகத்தை கடவுள் என்னும் சக்தி தாங்கி இயக்கி வருகின்றது என்பதையோ சிறிதும் அறியார். அறிந்தாலும் அதனைப்பற்றி சிந்திக்க மாட்டார். காமத்தின் பயனாக அன்பு, அமைதி, மனிதநேயம் மறைந்து, சினம், பொறாமை, வன்முறை மட்டுமே மிஞ்சும் என்பதை அறியார். அறியாத இவர்களே அசுரர்கள் அல்லது அசுர இயல்பு கொண்ட மனிதர்கள்.]

(தொடரும்)

# பாகவத தர்மத்தில் கிருஷ்ணவதாரம்

திருமதி. ந. சுபா பாண்டிச்சேரி

மக்களின் வாழ்க்கையானது சமயம் என்ற பிரிவோடு பின்னிப்பிணைந்துள்ளது. உலகில் தோன்றிய மதங்கள் யாவும் ஒரு காலகட்டத்தில் தோன்றி வளர்ச்சியுற்று வந்தன. சரியான காலத்தை வரையறுத்தல் என்பது இயலாது. இம்முறையிலே வைணவ சமயம் தோன்றிய காலத்தைக் கூற இயலாதே தவிர மிகப்பழமையான சமயம் என்று மட்டும் கூற முடிகிறது.

வைதீக சமயத்தில் ஒரு பிரிவாக வைணவம் அமைகிறது. விஷ்ணு பரத்துவத்தைப் பற்றி பேசும் பிரிவு வைணவமாகும். இந்த பாரத மண்ணில் தொன்றுதொட்டு விளங்கி வரும் இந்து சமயம் பல்வேறு வழிபாட்டு மரபுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளன. இந்து சமயத்தில் உள்ள பல்வேறு பிரிவுகளைக் கொண்டு, ஆதிசங்கரர் ஆறுபழிபாட்டு மரபுகளை உருவாக்கியிருக்கிறுர். அவை: (1) சிவ வழிபாடு, (சைவம்). (2) சக்தி வழிபாடு (சாக்தம்), (3) கணபதி வழிபாடு (காணு பத்தியம்), (4) முருக வழிபாடு (சௌமாரம்), (5) சூரிய வழிபாடு (கௌமாரம்), (6) விஷ்ணு வழிபடு (வைணவம்) என்பவையாகும். இவைகளை, "ஷண்மத ஸ்தாபனம்" என்று கூறலாம்.

பெரும்பாலும் இன்று, மக்களிடையே காணப்படும் சமயங்கள் சைவம், வைணவம் எனலாம். இவ் ஆறுவகைப் பிரிவுகளில் சூரியவழிபாடு, விஷ்ணு வழிபாடு இரண்டும் ஒருவகையாகவும், மற்றவை சிவ வழிபாட்டு மரபைச் சார்ந்தவையாகவும் கூறுவர்.

## வைணவ சமயம்

உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும் இறைவன் அவ்வப்பொழுது செய்து வருகிறுன் என்பது இந்து மக்களிடையே இருந்து வரும் நம்பிக்கை. இம்மூன்று தொழில்களைச் செய்யும் பரம்பொருள் உலகத்தைப் படைக்கும் பிரம்மனாகவும், உலகைக்காக்கும் விஷ்ணுவாகவும், உலகை அழிக்கும் சிவனாகவும் மூன்று தொழில்களைச் செய்து வருகிறுன் என்பது மக்களின் சமய வேதாந்திகளின் கருத்தாகும்.

இம்மூன்று தொழில்களுள் காத்தல் தொழிலைச் செய்யும் விஷ்ணுவுக்கு முதலிடம் கொடுக்கும் சமயம் - விஷ்ணுவையே பரம்பொருளாகக் கொள்ளும் சமயம் வைணவ சமயமாகும். விஷ்ணுவே மூன்று தொழில்களுக்கும் அதிபதி - மூவர்க்கும் முதல்வன் என்ற முறையில் வைணவர்கள் கருதுகின்றனர்.

## இந்து சமயதர்மம்

இந்து தர்மத்தில், இறைவன் யுகந்தோறும் உலகினைப் படைக்கிறுன். யுகந்தோறும் அழிக்கிறுன். இவ்வாறு, யுகங்கள் தோறும் இறைவன் தோன்றி இவ்வுலக மக்களைக் காத்து வருகிறுன் என்பது இந்து சமயக்கொள்கை எனலாம்.

இறைவன் உலகினை ஊழிதோறும் படைத்து, ஊழிதோறும் அழித்து வரும் செயலானது. தொடர்ந்து மாறி மாறி நடைபெறுவது ஆகும். அதாவது ஓர் ஊழியில் நிகழ்ந்த நிகழ்ச்சியே பிறிதோர் ஊழியிலும், மீண்டும் நடைபெறுகிறது. ஆகவே ஊழிதோறும் இராமாயண பாரதங்கள் போல்வன நிகழ்கின்றன என்று கருத்து அடிப்படையாக உள்ளது.

ஒவ்வொரு ஊழிக்கண்ணும் பல சதுர் யுகங்கள் கழிகின்றன. கிருத யுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்று நான்கு யுகங்களும் (சதுர்யுகங்கள்) பலமுறை திரும்பத்திரும்ப வந்தபிறகே ஊழி (பிரளயம்) ஏற்பட்டு, இறைவனால் உலகம் காக்கப்படுகிறது. இவ்வாறு உலகத்தைக் காத்து, அறவுணர்வு நிலைநாட்டாவே யுகந்தோறும் அவதரிக்கிறுன் என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்து.

## அவதார நோக்கம்

வைணவ நெறியில் இந் நிகழ்ச்சி 'அவதாரம்' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. அவதாரம் என்றுல் 'கீழிறங்குதல்' என்பதாகும். யுகந்தோறும் தான் உருமாறிப் பூமியில் தோன்றி, அறத்துக்குப் புறம்பானவற்றை அடியோடு அழித்து, அறவுணர்வு மீண்டும் தலை

## TIRUMALA TIRUPATI DEVASTHANAMS, TIRUPATI

# FESTIVALS OF 1998

| | | | |
|---|---|---|---|
| 8-1-98 | Thursday | ... | Vaikunta Ekadasi |
| 8-1-98 to 10-1-98 | Thursday | ... | Float Festival, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 13-1-98 | Tuesday | ... | Bhogi |
| 14-1-98 | Wednesday | ... | Sankranthi |
| 15-1-98 | Thursday | ... | Kanuma |
| 3-2-98 | Tuesday | ... | Radhasapthami |
| 6-2-98 | Friday | ... | Chandanabhishekam, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 7-2-98 to 11-2-98 | Saturday | ... | Float Festival, Sri Govindarajaswamy Temple, Tirupati |
| 17-2-98 to 25-2-98 | Tuesday | ... | Annual Brahmotsavam, Sri Kalyana Venkateswara Swamy Temple, Srinivasamangapuram |
| 24-2-98 to 28-2-98 | Tuesday | ... | Annual Brahmotsavam, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 8-3-98 to 12-3-98 | Sunday | ... | Float Festival, Tirumala Temple |
| 13-3-98 | Friday | ... | Sri Lakshmi Jayanthi |
| 25-3-98 to 1-4-98 | Wednesday | ... | Annual Brahmotsavam, Sri Kodanda Ramaswamy Temple, Tirupati |
| 25-3-98 | Wednesday | ... | Annamacharya Vardhanti |
| 26-3-98 to 28-3-98 | Thursday | ... | Float Festival, Sri Vedanarayana Swamy Temple, Nagalapuram |
| 29-3-98 | Sunday | ... | Telugu Ugadi |
| 5-4-98 | Sunday | ... | Srirama Navami |
| 9-4-98 to 11-4-98 | Thursday | ... | Vasanthotsavam, Tirumala Temple |
| 12-4-98 to 20-4-98 | Tuesday | ... | Annual Brahmotsavam, Sri Vedanarayana Swamy Temple, Nagalapuram |
| 14-4-98 | Tuesday | ... | Tamil New Year day |
| 1-5-98 | Friday | ... | Sri Sankara Jayanthi |
| 4-5-98 to 6-5-98 | Monday | ... | Sri Padmavati Parinayotsavam, Tiruchanur |
| 11-5-98 | Monday | ... | Sri Annamacharya Jayanti |
| 12-5-98 | Tuesday | ... | Tirupati Ganga Jathara |
| 21-5-98 | Thursday | ... | Hanuma Jayanthi |
| 1-6-98 to 9-6-98 | Monday | ... | Annual Brahmotsavam, Sri Govindaraja Swamy Temple, Tirupati |
| 8-6-98 to 10-6-98 | Monday | ... | Jyeshtabhishekam, Tirumala Temple |
| 14-6-98 | Sunday | ... | Sravanam |

# SAPTHAGIRI 1998

**JANUARY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | * | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 |
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 |

**FEBRUARY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| * | * | * | * | * | * | * |

**MARCH**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | 31 | * | * | * | * |

**APRIL**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 |
| 26 | 27 | 28 | 29 | 30 | * | * |

**MAY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 31 | * | * | * | * | 1 | 2 |
| 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 |
| 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |

**JUNE**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 |
| 28 | 29 | 30 | * | * | * | * |

**JULY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 |
| 26 | 27 | 28 | 29 | 30 | 31 | * |

**AUGUST**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 30 | 31 | * | * | * | * | 1 |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |

**SEPTEMBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | 1 | 2 | 3 | 4 | 5 |
| 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| 27 | 28 | 29 | 30 | * | * | * |

**OCTOBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | * | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 |
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 |

**NOVEMBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | * | * | * | * | * |

**DECEMBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | 1 | 2 | 3 | 4 | 5 |
| 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| 27 | 28 | 29 | 30 | 31 | * | * |

| | | | |
|---|---|---|---|
| 1-7-98 | Wednesday | ... | Sakshatkara Vaibhavam, Sri Kalyana Venkateswara Swamy Temple, Srinivasamangapuram |
| 5-7-98 to 6-7-98 | Sunday | ... | Jyestabhishekam, Sri Govindaraja Swamy Temple, Tirupati |
| 16-7-98 | Thursday | ... | Anivara Asthanam, Tirumala (Dakshinayanam begins) |
| 28-7-98 | Tuesday | ... | Garuda Panchami, Mangala Gowri Vratham |
| 2-8-98 to 5-8-98 | Sunday | ... | Pavithrotsavam, Tirumala Temple |
| 5-8-98 to 7-8-98 | Wednesday | ... | Float Festival, Sri Venugopala Swamy Temple, Karvetinagaram |
| 8-8-98 | Saturday | ... | Vighanasa Jayanthi |
| 9-8-98 | Sunday | ... | Gayathri Japam |
| 15-8-98 | Saturday | ... | Gokulastami |
| 24-8-98 | Monday | ... | Sri Varaha Jayanthi, Sri Balarama Jayanthi |
| 25-8-98 | Tuesday | ... | Vinayaka Chaturthi |
| 3-9-98 | Thursday | ... | Vamana Jayanthi |
| 5-9-98 | Saturday | ... | Anantha Padmanabha Vratham |
| 20-9-98 | Sunday | ... | Mahalaya Amavasya |
| 21-9-98 | Monday | ... | Kalasa Sthapanam, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 23-9-98 to 1-10-98 | Wednesday | ... | Annual Brahmotsavam, Tirumala Temple |
| 28-9-98 | Monday | ... | Saraswathi Puja |
| 29-9-98 | Tuesday | ... | Durgastami |
| 1-10-98 | Thursday | ... | Vijaya Dasami |
| 18-10-98 | Sunday | ... | Naraka Chaturdasi |
| 19-10-98 | Monday | ... | Deepavali |
| 29-1 | Thursday | ... | Pushpayagam, Tirumala Temple |
| 30-10-98 to 3-11-98 | Friday | ... | Float Festival, Sri Kalyana Venkateswara Swamy Temple, Narayanavanam |
| 16-11-98 | Monday | ... | Karthika Somavara Abhishekam, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 16-11-98 to 24-11-98 | Monday | ... | Annual Brahmotsavam, Sri Padmavati Ammavari Temple, Tiruchanur |
| 30-11-98 | Monday | ... | Gita Jayanti |
| 2-12-98 | Wednesday | ... | Krittika Deepotsavam, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 3-12-98 | Thursday | ... | Mukkoti, Sri Kapileswara Swamy Temple, Tirupati |
| 16-12-98 | Wednesday | ... | Dhanurmasam begins |
| 18-12-98 | Friday | ... | Adhyayanotsavam, Tirumala Temple |
| 29-12-98 | Tuesday | ... | Vaikunta Ekadasi |
| 30-12-98 | Wednesday | ... | Float Festival, Sri Kapileswara Swamy Temple, Tirupati |

யெடுக்கச் செய்து மக்களைக் காக்கும் தொழிலை மையமாகக் கொண்டவன் விஷ்ணு. அறம் தழைக்க வேண்டும்; அற நெறி பிறழ்தல் கூடாது என் பது இந்து சமய நெறியா கும். விஷ்ணு பல உருவங் களில் தோன்றுவதாலும் 'மாய வன்' 'மாயலீலைகள் செய்ப வன்' என்று பல பொருளில் குறிப்பிடுவதுண்டு. அந்த பல வகை உருவங்கள் தான் அவதா ரங்கள் ஆகும். விஷ்ணு எடுத் துள்ள அவதார நிகழ்ச்சிகள் கணக்கில் அடங்காது. ஆயி னும், அவற்றுள் பத்து அவ தாரங்கள் மட்டும் பிரசித்தமா னவை என்று குறிப்பிடுகின்ற னர். இந்த அவதாரக்கொள்கை களைப் பரப்புவதைப் புராணங் கள் தமது முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளன.

அறத்தைச் சாடி அதர்மம் தலைதூக்கும்பொழுது இறை வன் தன் உயர்ந்த வடிவில் இருந்து கீழிறங்கித் தீமையை அழித்து நன்மைகள் செய்வ தாக மக்களால் நம்பப்பட்டு வரு கின்றது. இது இந்துக்களின் சமயக்கொள்கை. இதனையே,

"விரிந்திடு தீவினை செய்த
வெவ்விய தீவினையாலும்
அருங்கடையின் மறை அறைந்த
அறம் செய்த அறத்தாலுமே..."

அவதாரம் நிகழ்வதாகக் கம்பர் கூறுகிறார்.

## கிருஷ்ணாவதாரச் சிறப்பு

விஷ்ணுவை பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சாவ தாரம் என்ற ஐவகை நிலைக ளில் காணவேண்டும். இவைகள் திருமாலின் மூர்த்தி பேதங்கள் என்று குறிப்பிடுவர்.

இவ்வகை நிலைகளுள், 'விப வம்' என்பது தோன்றி வந்த வடிவம் என்று பொருள்படுவ தால் அவதார நிலைகள் இதில டங்கும். விஷ்ணு எடுத்த அவ தாரங்களை ஆவேச அவதாரம், முக்கிய அவதாரம் என்ற இரு பிரிவுகளில் அடங்குவதுண்டு. முக்கிய அவதாரங்களுள் இரா மன், கிருஷ்ணன் முதலியோர் அடங்குவர்.

குறிப்பாக கிருஷ்ணன், 'பூர் ணாவதாரம்' (சாட்சாத் அவதா ரம்) என்ற பெயரில் குறிப் பிடுவர். பத்து வகை அவ தாரங்களுள் இவ்வகை அவதா ரம் மட்டும் சிறப்பிற்குரிய இடத் தைப்பிடித்துள்ளது. காரணம், மற்ற அவதாரங்கள் தோன்றி மறைந்த காலம் மிகக்குறைவு. மேலும் விஷ்ணு தன் நிலை தன் உருவம் மாறி தோன்றி முடிந்த வகைகள் ஆகும். ஆனால் கிருஷ்ண அவதாரம் மட்டும் தன்னுடைய நிலை மாறாது. பரம்பொருள் உரு வத்துடனே தோன்றி, இறுதி வரையில் பூமியில் இருந்ததால் சிறப்பிற்குரியதாக அமைகிறது. குறிப்பாக தான் பரம்பொருள் என்பதனை, அவ்வப்பொழுது அனைவர்க்கும் வெளிக்காட்டிக் கொண்டிருந்த அவதாரம், இது வாகும்.

"பரித்ராணாய ஸாதுனாம்
விநாசாய சதுர்க்ருதாம்
தர்ம-ஸம்ஸ்த் தாபனார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே"

என்பதில், அறத்தை நிலை நாட் டுவதற்காகத்தான் யுகந்தோறும் அவதரிப்பதாகக் கிருஷ்ணன் பகவத் கீதையில் கூறியிருப்பது தெளிவு.

மேலும், தானே பஞ்ச பூதங் கள் வடிவாக இருப்பதாகவும், மக்கள் எந்தெந்த வடிவில் நினைத்து வழிபடுகின்றாரோ, அவ்வடிவில் தான் அருள் செய் வதாகவும் கிருஷ்ணனே பகவத் கீதையில் கூறியிருக்கிறார்.

தன்னிடத்தில் தூய அன்பு டன் பூ, பழம் போன்ற பொருட் களைக் கொண்டு எவன் ஒரு வன் தன் பெயரைச் சொல் லிக்கொண்டு வழிபடுகிறானோ அவனுக்கு தான் அருள்புரிவ தாகக் கூறுகிறான். இந்த எளி மையான - சௌலப்பிய நிலை கொண்டதாக கிருஷ்ண வழி பாடு அமைந்திருப்பதால்தான் மிக விரைவில் இப்பக்தியானது உலகம் முழுவதும் பரவியதற் கான காரணம் என்று கூறலாம்.

இவ்வாறு துவாபார யுகத் தில் தோன்றிய கிருஷ்ணன் தன்னிடத்தில் எவ்வகையில் பக்தி செலுத்தவேண்டும் என் பதனை அவ்வபொழுது மக்க ளுக்குச் சொல்லிக்கொண்டிருந்த காலம் முதலே கிருஷ்ண வழி பாடு தோன்றிவிட்டது.

## பாகவத தர்மம்

வைணவ சமயத்திற்கு பாஞ் சராத்திரம், வைகானசம் என்ற இருவகை ஆகமங்கள் இருக் கின்றன. இந்த பாஞ்சராத்ரக் கொள்கை தான் பாகவத தர்மம், வைணவ தர்மம் என்ற பெயர் களில் அழைக்கப்பட்டு வருகின் றது.

வைணவத்திற்கு, பாகவதம், பாஞ்சராத்திரம், சாத்வதம், ஏகாந்திகம் என்ற பெயர்கள் வழங்கி வருகிறது. இவைக ளில் விளக்கம்:

(1) பாகவதம் என்பது இறை வனைப் பகவான் எனக் கொள் ளும் வழிபாட்டு மரபாகும். இம் மரபினர் பாகவத புராணத்தை யும், பகவத் கீதையையும், மகா பாரதத்தில் நாராணீயப் பிரிவி னையும் தங்கள் நம்பிக்கைக்கு

அடிப்படையாக ஏற்றுக்கொள்கின்றனர்.

(2) பாஞ்சராத்திர மரபினர் அப்பெயருடன் விளங்கும் ஆகமங்களைத் தங்கள் அடிப்படையாகக் கொள்கின்றனர்.

(3) சாத்வத மரபினர் கிருஷ்ணன் சார்ந்த இனமாகிய சாத்வதத்திலிருந்து அப்பெயரைப் பெறுகின்றனர்.

(4) ஏகாந்திக மரபு என்பது, ஒரே ஒரு முடிவைக் கொண்டதாகும். இவர்கள் நாராயணனையே, மனிதர் அடைய வேண்டிய மேலான முடிவாகக் கொள்கின்றனர்.

பாகவத மதம் என்பது கிருஷ்ணனால் புத்தர் காலத்திற்கு முன்பே உண்டாக்கப்பட்டது என்று கூறப்படுகிறது. இதன் கொள்கை வாசுதேவனே பர தெய்வம் என்பதும், அவனிடம் பக்தி செய்வதே முக்தியளிக்கும் என்பதும் ஆகும். இவ்வாறுக, கிருஷ்ணன் நாளடைவில் தெய்வினைக்கு பரநிலைக்கு உயர்த்தப்பட்டான். குறிப்பாக, பகவத் கீதை காலத்தில் கிருஷ்ணன் விஷ்ணுவின் முழுவடிவம் என்ற நிலைக்கு உயர்த்தப்பட்டான். ஆகவே கிருஷ்ணுவதாரம் என்பது விஷ்ணுவின் முழு வடிவம் என்பது தெள்ளத்தெளிவாகிறது. இப் பாகவத தர்மத்தில் வாசுதேவ கிருஷ்ணனே பரதெய்வம் என்ற ஏக தெய்வீக கோட்பாட்டை கொண்டிருந்தது என்று கூறலாம். ஆனால், இன்று வைணவத்துடன் அனைத்தும் உள்ளடங்கியதால் விஷ்ணு - வாசுதேவ கிருஷ்ணன் - நாராயணன் ஆகிய மூன்றும் ஒன்று படுத்தப்பட்டது.

பாஞ்சராத்திர ஆகமத்தில் வேதாந்தக் கொள்கையிலும் முதல் நிற்பது 'வியூகக்' கொள்கையாகும். வியூகம் என்ருல் 'பிரிந்து நிற்பது' என்பது பொருள். ஒரே தெய்வம் நான்கு விதமாக தன்னை வகுத்துக் கொண்டு நிற்கின்றது என்பது இதன் அடிப்படை. வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்று நான்குவிதமாக ஒரே கடவுளே இருக்கிருர் என்பது ஆமகத்தில் இடம்பெறுகிறது.

வைணவர்களைப் பாகவதர்கள் என்றும் குறிப்பிடுகிருர்கள். பாகவதம் என்ற பெயரில் விஷ்ணுவின் பெருமையை விளக்கும் நூலும் இருந்து வருகிறது. பல இடங்களில் 'பகவான்' என்ற சொல் விஷ்ணுவுடன் சம்பந்தப்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால், பாஞ்சராத்திர ஆகமம், பகவான் என்ற சொல்லுக்கு ஞானம், பலம், ஐஸ்வர்யம், வீரியம், சக்தி, தேஜஸ் ஆகிய குணங்கள் உள்ளன என்று பொருள் கூறுகின்றது. இவைகள், சங்கர்ஷணன், பிரத்யும்னன் அநிருத்தன் இவர்களிடையே வகுக்கப்பட்டு நிற்கிறது. இவைகளுக்கு வாசுதேவன் தான் மூலம். நான்கு பெயர்களும் ஒரே கடவுளைக் குறிக்கிறது என்ருலும் நான்கு இடங்களில் அந்த வாசுதேவன் நான்குவிதப் பெயர்களில் தோன்றுகிருன். எனவே அவனுடைய அவதாரங்களுடன் சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் ஆகிய மூவரும் ஒப்பப்படுகின்றனர். ஆகவே, வியூகக் கொள்கையும் அவதாரமும் ஒன்றிற்கொன்று நெருங்கிய தொடர்பு இருப்பது போன்று தோன்றுகிறது.

கிருஷ்ணுவதார ரகசியம் புராணங்களில் **விஷ்ணு புராணம், வாயு புராணம், கூர்ம புராணம் ஆகிய மூன்றும் சிறந்தது என்பர். பாகவத புராணம், விஷ்ணு புராணம் இரண்டிலும் கிருஷ்ணனும், விஷ்ணுவும் ஒன்று என்ற முறையில் கூறப்பட்டுள்ளது.**

**'வாசுதேவன்' என்ற பெயர் தான் கிருஷ்ணனுக்கு முதன் முதலில் கொடுக்கப்பட்டது. தந்தை பெயர் 'வசுதேவன்' என்பதால் இப்பெயர் ஏற்படவில்லை. 'வாசுதேவன்' என்பது 'ஈச்வரன்' (மூலப் பரம்பொருள்) என்ற பொருளில் பாணினி இலக்கண உரை வழி அறியலாகின்றது. அதனால்தான், கிருஷ்ணனை "Supreme Lord Krishna" என்ற பொருளில் 'வாசுதேவ கிருஷ்ணன்' என அழைக்கப்படுகிருன்.**

**கிருஷ்ணன் அவதாரம் நாராயணனுடனும், விஷ்ணுவுடனும் பிற்காலத்தில் இணைக்கப்பட்டது என்று கூறலாம். ஸ்ரீசங்கராச்சாரியார் அவர்கள், "வாசுதேவனே பரமான்மா. அவனே உயிர்க்குயிராக உள்ளன். அவனே படைப்புக் கடவுள். உலகில் உள்ள எல்லா உயிர்களும் வாசுதேவனுடைய ஓரம்சமான சங்கர்ஷணனின் வடிவே, அவனிடமிருந்து பிரத்யும்நனும், பிரத்யும்னனிலிருந்து அநிருத்தனும் தோன்றினான் என்பதாக வைணவ சமயத்தில் உள்ள கருத்து, சங்கர்ஷணன் முதலிய நால்வரும் இறைவன் விஷ்ணுவின் மூர்த்தங்கள்" என்று மகாபாரதத்தில் இடம் பெற்றுள்ளதாக விளக்குகிருர். இதன் மூலமும் விஷ்ணுவும், வாசுதேவ கிருஷ்ணனும் ஒன்ருக்கப்பட்ட நிலை தெரியவருகின்றது. அதனால் தான், மற்ற அவதாரங்களை**

விட இவ்வவதாரம் சிறப்பிற்குரியதாக இன்றுவரை ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகின்றது.

கிருஷ்ணனது செயல்கள் அனைத்தும் மிக அற்புதம். சரீர பலம் அனைத்தும் அசாதாரணமானது. சாதாரண மனிதனால் முடியாத செயல்கள். எ.கா.: கோவர்த்தன மலை தூக்குதல், யுத்தத்தில் ரதத்தைக் கால் நுனியால் தாழ்த்துதல், காளிங்கனை அடக்குதல் முதலியன. கோகுல மக்களுக்கு நிகழ்ந்த கொடுமைகளை துன்பங்களை கிருஷ்ணன் எளிதில் தீர்த்து, வெற்றியடைந்து, யாதவர்களைக் காப்பாற்றின காரணத்தால் அவனைப் பரம்பொருள் என்று கருதினர். கிருஷ்ண அவதாரம் பொறுத்தமட்டில், விஷ்ணுவின் வைகுண்டம் போன்று, கோகுலமானது 'கோ வைகுண்டம்' என்று கூறலாம். யாதவர்களுக்கு கோகுலம் தான் 'வைகுண்டம்'.

கிருஷ்ணன் செய்த ராஸ லீலை, யமுனை ஆற்றடையில் பெண்கள் நீராடுகையில் ஆடைகள் மறைத்தமை ஆகிய லீலைகள் அனைத்தும் தத்துவமான பொருள் கொண்டவை என்று கூறப்படுகிறது. இந்தத் தத்துவப் பொருளை அறியாத சிலர் இந்நிகழ்ச்சிகளைக் கேலிக்குரியதாகப் பேசுவதுண்டு.

## கிருஷ்ண பக்தி

'விஷ்ணு' என்ற சொல்லினை அடிப்படையாகக் கொணடு 'வைஷ்ணவம்', 'வைணவம்' என்ற பெயரில் வைதீகச் சமயப்பிரிவு உண்டாகிறது. இந்த வைணவ ஆகமங்களில் விஷ்ணுவுக்குப் பதிலாக 'வாசுதேவன்' என்ற பெயரைக் குறிப்பிடுகின்றனர். பின்னர் தோன்றிய ஆச்சாரியார்கள் 'நாராயணனன்' என்ற பெயரே பொருத்தமானது என்று கொண்டுள்ளனர்.

வைணவக் கோயில் வழிபாடுகளில் வாசுதேவன் முதலிய நான்கு வியூகங்களில் பெயர்கள் தான் இடம் பெறுவதாகக் கூறப்படுகிறது. ஆகவே வைணவர்களுக்கு விஷ்ணு பரம்பொருள் என்றுலும், ஆகமங்களில் வாசுதேவன் என்றுலும், ஆழ்வார்கள் - ஆச்சாரியர்களின் முறைகளில் நாராயணன் என்றுலும் மூன்றும் ஒன்றுக்கப்பட்டுள்ளது என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

கிருஷ்ணபக்தியானது வைணவ சமயத்தில் மிகவும் ஒன்றிவிட்டது. இசைப்பாடல்கள் பாடுவதன் மூலம், நாம சங்கீர்த்தனம் (ஹரே கிருஷ்ண! ஹரே கிருஷ்ண! கிருஷ்ண கிருஷ்ண ஹரே! ஹரே!) செய்வதன் மூலம் வாசுதேவனை அடைய முடியும் என்ற முறையினை வடநாட்டில் தான் அதிகமாகக் காணமுடிகிறது. தென்னாட்டைப் பொருத்தவரை ஆலய வழிபாடே (ஆகம வழிபாடு) சிறந்தது என்று கொண்டுள்ளனர்.

வடநாட்டில், குறிப்பாக வங்காளத்தில் சைதன்யர் மூலம் கிருஷ்ணபக்தி மிக விரைவில் பரவிவிட்டது. இவரது கொள்கைப்படி, கிருஷ்ணன் தான் மூலப்பிறப்பு, அவன் தான் பல பிறப்புக்கள் எடுத்துவந்தான் என்பதாகக் கருதப்பட்டு வருகிறது. கிருஷ்ண பக்தியைச் சிறப்பாகப் பரப்பிய இவரை 'கிருஷ்ண சைதன்யர்' என்றே அழைக்கப்படுகின்றுர். இவரும் கிருஷ்ணரின் ஓர் அம்சம் என்று மக்களால் கருதப்பட்டு வருகிறது.

கிருஷ்ணனே மூலப்பரம்பொருள் என்பதால், அவதார வகைகளில் கிருஷ்ணன் பெயர் இடம் பெறவில்லை. அதற்குப்பதிலாக புத்தரை ஓர் அவதாரமாக ஏற்றுக்கொண்டுள்ளது குறிப்பிடப் பட்டுள்ளது.

வாசுதேவ கிருஷ்ணனிலிருந்து தான் அனைத்தும் உண்டாயின என்ற கருத்தை ஏற்று, இன்று ISCON என்ற கிருஷ்ண பக்தி இயக்கம் ஒன்று இந்தியாவில் செயல்பட்டு வருகிறது. இதன் மூலம், கிருஷ்ணனின் நிலங்கடந்த - உலகளாவிய கடவுளாக - பரம்பொருளாக உயர்த்தப்பட்டிருத்தல் சிறப்பிற்குரியது. இவ்வியக்கம் உலக நாடுகளிலும் பரப்பி, கிருஷ்ணனை ஓர் உயர்ந்த கடவுளாகக் கருதி வழிபட்டு வருகின்றது.

வைணவ சமயத்தில் வாசுதேவ கிருஷ்ணனைக் குறிப்பிட்டாலும் சமயம் - சாதி என்ற பேதமின்றி, மனத்தூய்மையுடன் அன்புடன் கிருஷ்ணன் பெயரைச் சொல்லிக் கொண்டிருந்தாலே முக்தி பெற முடியும். அத்தகைய எளிய வடிவம் (சௌலப்பிய நிலை) கொண்டவன், என்ற தன்மைகளை இவ்வியக்கத்தின் மூலம் உலக நாடுகளில் பரப்பப்பட்டு வருகிறது. அந்த அளவிற்குக் கிருஷ்ண அவதாரம் - கிருஷ்ண பக்தியானது, இந்தப் பாரத பூமிக்கு மட்டுமின்றி உலகத்திற்கே சொந்தமுடையதாக, மிக விரைவில் பரவிவிட்டது என்பது கண்கூடாகும்.



# சொன்னவண்ணம் செய்பவன்

டாக்டர் கே.கே.ஏ. ரங்கராஜன் - திருப்பதி.

காலம் பழமையான காலம். ஊர் மதுரை மாநகரம். அதில் ஓர் ஏழைக் குடும்பம். கிருஷ்ண பக்தி நிறைந்த பரம்பரை. தந்தையற்ற தனயன் தாயிடம் வளர்ந்து வருகிறான். அவனுக்கு ஏழு வயது ஆகிறது. அவனுக்கு கல்வி கற்பிக்கவேண்டும் என்று அவன் தாய் நினைக்கிறாள். ஆனால் ஏழ்மையில் வருந்தும் அந்தத்தாய் அவன் கல்விக்காகப் பணம் செலவு செய்ய வசதியற்றவள். எனினும் தன் மகனை எந்தவிதத்திலாவது படிக்க வைக்கவேண்டுமென்று உறுதி கொள்கிறாள். மதுரைக்கடுத்துள்ள சிற்றூர் ஒன்றில் ஒருவர் இலவசமாகக் கல்வி கற்பிப்பதாகக் கேள்வியுற்று அத்தாய்த் தன்மகனை அந்த ஆசிரியரிடம் சென்று கல்வி பயின்று வருமாறு ஆணையிடுகிறாள். அசிற்றூர் மதுரையிலிருந்து நான்கு கல் (மைல்) தூரத்திலுள்ளது. வழி முழுவதும் காடு. தன் தாயின் ஆணையின்படி கல்வி கற்க அச்சிறுவன் அச்சிற்றூருக்குச் செல கிறான். நகரின் எல்லையைக் கடநதவுடன் காடுவழி ஆரம்பமாகிறது. அவ்விடம் ஆடு மாடுகளைத் தவிர மனித நடமாட்டமில்லாது வெறிந்து கிடந்திருப்பதைக் கண்ட அச் சிறுவன மீண்டும் வீடு திரும்புகிறான். அககாட்டு வழியில் தனககுத் துணையாக ஒரு சேவகனை அனுப்புமாறு தன தாயிடம் வேண்டுகிறான். அத்தாய் பொறுமையுடன் தன் மகனுக்கு, 'உனக்குத் துணையாக ஒருவனை அனுப்பினால் அவனுக்கு மாத ஊழியமாக நாலைந்து காசு கொடுக்கவேண்டும்; அந்தப் பணமிருந்தால் உன்னை இந்நகரத்திலேயே படிக்கவைத்திருப்பேனே' என்று எடுத்துச் சொல்கிறாள். அவள் பக்தி நிறைந்தவளாகையாலே சற்று சிந்தித்து, "உன் அண்ணன் அங்கு இருக்கிறான்; நீ காடு வழி நடக்குமுன் 'அண்ணா ராதாரமணா' என்று அழைத்தால் உடனே ஓடிவந்து உனக்குத் துணையாக இருப்பான்" என்கிறாள். தன் தாய் சொன்னவண்ணம் அன்றுமுதல் அக்காட்டுவழியைக் கடக்குமுன் 'அண்ணா ராதா ரமணா' என்றழைக்க கண்ணபிரான் சிறுவனாக வந்து அச்சிருவனுக்குத் துணையாக வந்து கொண்டிருக்கிறான். இவ்விதமாக நாட்கள் பல கடந்தன.



ஒருநாள் அச்சிறுவனின் குரு தன் அறுபதாமாண்டு நிறைவு விழாவைப் பற்றி மாணவர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். தன் மாணவர்களிடம தங்களால் இயன்றவற்றை ஆசிரியருக்குக் காணிக்கையாகச் செலுத்தலாம் எனறும் தெரிவித்தார். இச்செய்தியைத தன்தாயிடம் அச்சிறுவன் சொன்னான். அவனும் தன் ஆசிரியருக்குத தன்னால் இயன்றதைக் கொடுக்க விருப்பங்கொணடான். அவ்விருப்பத்தையும் தாயிடம தெரிவித்தான. அவள தன்னிடம் ஏதுமிலலாதது கண்டு வருந்தினாள். தன் மகனைப் பார்த்து 'தினமும் எப்படி ஆசிரியரிடம் போய் வருகிறாய் என்று கேட்க அண்

ணன் ராதா ரமணன் தான் துணைக்கு வருகிறுன்' என்று அச்சிறுவன் சொன்னான். அத் தாய் சிறுவனின் சொல்லைக் கேட்டு, 'என்னவேண்டுமோ அவனையே கேள்; அவனே கொடுப்பான்' என்ருள். மறுநாள் அச்சிறுவன் வழக்கம் போல் காட்டு வழியில் 'அண்ணு ராதாரமணு' என்றழைக்க கண்ணபிரானும் வந்தான். இருவரும் நெடுகிப் பேசிக் கொண்டே போனார்கள். நடுவில் அச்சிறுவன் தன் ஆசிரியரின் அறுபதாமாண்டு நிறைவுவிழா பற்றிச் சொல்லித் தன் காணிக்கை பற்றியும் சொன்னான், கண்ணபிரானிடம்.

கண்ணபிரான் ஒரு குடுவையில் (பாத்திரம்) பாலை நிறைத்துக்கொடுத்து, 'உன் ஆசிரியருக்கு இந்தப் பாலைக் கொடுத்துவிட்டுக் குடுவையைத் திரும்ப எடுத்துவா' என்ருன். சிறுவனும் வெற்றுக்கையுடன் செல்லாது பாலை எடுத்துச் செல்கிறேன் என்ற மன நிறைவுடன் சென்ருன். இந்தப் பாலைத் தன் ஆசிரியருக்குக் கொடுக்க அருகே சென்ருன். மற்ற மாணவர்கள் கொண்டு வந்த பொருள்களைப் பார்த்து மகிழ்ச்சியில் மூழ்கிக்கிடக்கிருர் ஆசிரியர். இவனைக் கண்ணெடுத்தும் ஆசிரியர் பார்க்கவில்லை. ஆனால் இறுதியாகச் சிறுவனின் தொல்லை தாங்காது. ஒரு வேலையாளைக் கூப்பிட்டு 'அந்தப்பாலை ஒரு பாத்திரத்தில் சேர்த்துவிட்டுக் குடுவையை அவனிடம் கொடுத்துவிடு' என்ருர் ஆசிரியர். வேலையாளும் ஆசிரியர் சொன்னதுபோல் செய்தான். பால் நிறைந்து வழிந்தது. "வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்" (திருப்பாவை-3) என்கிறபடியாயிருந்தது. அதாவது ஆயர்பாடியிலுள்ள வள்ளல்தன்மை பொருந்திய பெரிய பசுக்கள் பாலை இடைவிடாது பொழியச் செய்கின்றன. பாத்திரம் இடாதார் குற்றமே தவிர பசுக்களின் ஈயும் தன்மையில் குறையே இல்லை என்பதாம்.

மேலும் ஒரு வியப்பு யாதெனில் எல்லாப் பாத்திரங்களில் பாலை ஊற்றிய பின்னரும் குடுவையில் பால் சிறிதும் குறையாமலிருந்தது. அந்த வேலைக்காரன் மிக வேகமாக ஓடிச் சென்று இந்த வியப்பினை ஆசிரியரிடம் சொன்னான். அவரும் எழுந்துவந்து பார்த்துவிட்டு 'இந்தப் பாலை யார் கொடுத்தது?' என்று ஆசிரியர் கேட்க, 'என் அண்ணன் தான் கொடுத்தான்' என்ருன் சிறுவன். அவனுக்குத் தாயைத்தவிர வேறு எவருமில்லை என்பதை முன்னமே ஆசிரியர் கேள்வியுற்றிருந்தார். எனவே விவரமாக நடந்தவற்றைச் சொல்லுமாறு ஆசிரியர் அச்சிறுவனைக் கேட்க, அவனும் முதலிலிருந்து நடந்த எல்லாவற்றையும் சொன்னான். அப்போதுதான் பாலைப் பற்றியும் அதைக் கொடுத்தவனைப் பற்றியும் உணர்ந்தார். உடனே ஆசிரியர், 'அவன் யாருமில்லை; அவன் கிருஷ்ணபகவான் தான், என்னுடைய அஹங்காரத்தைப் போக்க வந்துள்ளான்' என்று சொல்லி, அவனைத் தனக்குக் காண்பிக்குமாறு வேண்டினார். அவனும் 'அப்படியே' என்று சொல்லி அக்காட்டு வழியில் செல்கிருன். வழக்கம் போல் சிறுவன் அவனை 'ராதாரமணு' என்று அழைக்கிருன். ஆனால் தற்போது சிறுவனுக்குத் துணை தேவையில்லை என்று எண்ணிய கண்ணன் அக்குரலுக்குச் செவி சாய்க்காது இருந்துவிட்டான். இதைக் கவனித்த 'ஆசிரியர், அவன் (பகவான்) எங்கே வரப்போகிருன்; இந்தப் பாவி இருக்கும் போது அவன் வரமாட்டான்' என்று சொல்லி மனவருத்தத்தோடு அழுதுகொண்டே சென்றுவிட்டார். ஆசிரியர் அங்கிருந்து மறைந்தபின்பு கண்ணன் வந்தான். சிறுவன், 'அண்ணு! உன்னைக் காண என் ஆசிரியர் வந்தபோது கூப்பிட்டும் நீ வரவில்லை; நீ வராமையினால் அவர் அழுதுகொண்டே போகிருரே' என்று சொல்லி அவனும் அழத்தொடங்கினான். ராதாரமணுன அப்பகவானும் சிறுவனுடைய பக்திக்கிலக்கான அவனுடைய ஆசானுக்கும் காட்சி தருவோம் என்று மனமிரங்கி ஆசிரியரையும் அழைத்து அவருக்கும் காட்சி தந்து சிறுவனின் காணிக்கைப் பொருளாக அருள் புரிந்தான்.

'நம்பினோர் கைவிடப்படார்' என்பதற்கிணங்க நம்பினவர்களைக் காப்பதோடு நில்லாது இறைவன் தன்னுடைய பக்தன் சொன்னவண்ணம் செய்பவன் என்பது இதனால் புலனாகின்றதல்லவா!



# ராஸ லீலை

திரு. வி. சுப்பிரமணியன் - உடுமலை.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஆயர்பாடியிலும் பிருந்தாவனத்திலும் நிகழ்த்திய நிகழ்ச்சிகள் அனைத்தும் பக்தி பிரேமையே வளர்க்கும் விளையாட்டுகளே. அவை ராஸக்ரீடைகள் என்று வழங்கப் பட்டு வருகின்றன. ராஸக்ரீடை, ராஸலீலை என்றும் கூறப்படும். ராஸம்- இனிமை என்று பொருள்படும். இனிமை தருவது ஆனந்தம். எனவே ராஸக்ரீடை, அளவற்ற இன்பத்தையும் அளவற்ற ஆனந்தத்தையும் கொடுக்கும். கிருஷ்ண பகவானுடைய ராஸலீலைகள் கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் கண்டவர்க்கும் கேட்டவர்க்கும் அறிவை மயக்கும் பக்தி ப்ரேமையை உண்டாக்குவனவாகும். சிவபெருமான் அடியார்களின் பொருட்டு மதுரையில் நிகழ்த்திய அற்புதச் செயல்கள் திருவிளையாடல் எனப்பட்டது. திருவிளையாடல்கள் மக்களுக்குப் பக்தியை விளைவிக்கும். வியக்கத்தக்க செயல்களாகும். அதைப்போன்றதுதான் ஸ்ரீகிருஷ்ணபெருமான் கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் நடத்திய அதிஅற்புதச் செயல்கள். அவை ராஸ லீலைகள் ஆகும். அவை எல்லா உயிர்களையும் பக்தி வெள்ளத்தில் மூழ்கச்செய்கின்றன.

ராஸ லீலைகள் மக்கள் மனங்களை மாற்றி இறைவன் மீது காதல் கொண்டு காமமுறவும் செய்கின்றன. காதல்-அன்பு, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி என்றதில் இறைவனிடத்தில் அன்பு கொண்டு பக்தி மேலீட்டால் கண்ணீரும் விட்டனர். பக்தியினால் கண்ணீர் விடுவது ஆனந்தக் கண்ணீராகும். மனிதன் இறைவனிடத்திலே காதல் கொண்டு காமவசப்படுவது ஜீவாத்மா பரமாத்மாவில் ஐக்கிய சம்பந்தமுடையதாகும். நல்ல அர்த்தத்தை அறியாமல் அனர்த்தம் செய்வது அறிவீனமாகும். ஜீவாத்மா பரமாத்வாவில் ஐக்கியப்படுவதோ ஐக்கியப்படுத்துவதோ ராஸ லீலைகள் ஆகும். அதனால் தான் கோவில்கள் ராஸ லீலை மைதானங்களாக விளங்குகின்றன. இன்றும் ராஸலீலைச் சிற்பங்கள் கோவில்களின் கோபுரத்திலும் சுவர்களிலும் தூண்களிலும் விளங்குகின்றன. ஆதலால் கிருஷ்ண லீலைகள் காமலீலைகள் அல்ல. பக்தியை வளர்க்கும் ராஸலீலைகளே. தெளிவாகச் சொன்னால் பேரின்பம் தரும் திருவிளையாடல்களேயாகும்.

கிருஷ்ண பரமாத்மாவின் தலைக்கொண்டையும் அதில் அழகு செய்யும் மயில் தோகையும், காதுகளில் அணிந்துள்ள மலர்க்கொத்துக்களும் பொன்னிறத்துப் பட்டாடையும் வைஜயந்திமாலையும் குழலோசையும் எல்லாமே ராஸங்களாகும்.



“தன்னிறத்து மயில்தோகை கண்ணன்
தலைமீதில் நடமாட
கர்ணிகாரப்புஷ்பங்கள் (கண்ணன்)
காதுகளில் விளையாட
பொன்னிறத்துப்பட்டாடை
புகழுள்ள வைஜயந்தி
கண்ணன் கவின் மேனியிலே
மின்னலிடும் அழகென்ன
வேடமிடும் வித்தையிலே
வெற்றிகண்ட கூத்தாடி

ஆடலுக்குப் பின்னணியும்
அமுதூறும் குழலூதி
மாடுகளை மேய்த்திடுவான்
மறைபாடிப் பின்தொடர
காடுகளை அலங்கரிக்கும்
கண்ணன் காலடியின் அழகென்ன
பர்ஹாபீடம் நடவரவபு: கர்ணயோ:
கர்ணிகாராம்
பிப்ரதவாஸ: கனககபிஸம்
வைஜயந்தீம்ச மாலாம்
சந்த்ரான் வேணோர் அதர சுதயா
பூரயன் கோபப்ருந்தை
ப்ருந்தாரண்யம் ஸ்வபதரமணம்
ப்ராவி சத்கீதகீர்த்தி

பாலகிருஷ்ணன் கோகுலத்திலே கோபியர்கள் மத்தியில் நின்றும் கூட சேர்ந்து ஆடிய ஆட்டங்களும் அனந்தம். அவை ஆனந்தம் தருவன. ஸ்படிகம் போன்ற கோபியர்கள் மத்தியில் மரகதம்போல விளங்கினார். லால் என்றால் குழந்தை என்பது பொருளாகும். குழந்தைக் கண்ணன் கோபியர்களுடன் விளையாடிய அழகு சரத்காலநிலவினிலே ஆடிய சௌந்தர்யம் தான் என்னே!

நடவரலால கிரிதர கோபாலு
ஜய் ஜய் நந்தயசோதா கேலாலு
ஸார ஸார நந்த்யசோதா கேலாலு
ராதா ரஸிக வர ராஸ விஹார்
சரத பௌர்ணிமா நிர்மல யமுனா
அற்புத ராஸ மகோத்ஸவ அனுபம
கௌர ராதா ஔர கனஸ்யாம்
யுகள சோபா அபார லாலா

ஸ்படிக ஸ்வடிகமய கோபீ
மண்டலதாம்
கோபீ கோபீ மத்யே மரகதஸ்யாம்
தன்யதன்ய வ்ரஜ நாரீதன்யஹோ
தன்யப்ருந்தாவன புளினதன்யஹோ
வ்ரஜ வ்ரஜ கமருகதருஸப்தன்யஹோ
வ்ரஜ வ்ரஜயமுனாபுளின தன்யஹோ

கண்ணன் மீது கோபியர்கள் மிகுந்த பக்தி பிரேமையுடன் காதல் கொண்டார்கள். கண்ணனும் பக்தர்களை நேசிப்பவன் அல்லவா? அவ்வாறே கோபியர்கள் மீது அன்பு கொண்டு பல விளையாடல்களைச் செய்தான். ஸ்ரீராதையிடமும் கோபியர்களிடம் போலவே சிறப்பான லீலைகளைச் செய்துள்ளான். கண்ணனின் ராஸ லீலைகளைச் ஜய தேவ ஸ்வாமிகள் கீத கோவிந்தத்தில் அழகுபட சித்தரித்துள்ளார். மற்றும் பல கிருஷ்ண பிரேமிகளும் கண்ணனின் ராஸ லீலைகளை அழகுபடப் பாடியுள்ளனர். கண்ணனைச் சுற்றிலும் பல கோப கன்னியர்கள் கண்ணனைத் தழுவுதலினால் மனங்கவரும் கேளிக்கைகளில் நாட்டம் கொண்டான் அவன்.

அனேகநாரி பர ரம்ப ஸம்ப்ரம்
ஸ்புரன் மனோ ஹாரி விலாஸ்
லாலஸம்
முராரி மாராதுப தர்ஸயந் யஸௌ

சந்தனத்தைப் பூசிக்கொண்டு நீலமேனயில் பொன்னிறமான ஆடையுடுத்தி வனமாலையும் அணிந்து தானாடும் பொழுது காதுகளில் அணிந்துள்ள குண்டலங்களின் ஒளிபடரும் கன்னங்களையுடைய கண்ணனின் காதலினால் மயங்கி தன்னை மயக்கும பெண்களின் கூட்டத்தின் மத்தியில் விளையாடி மகிழ்கிறான் கிருஷ்ணன். அன்பு ததும்பும் கோபியொருத்தி கண்ணனின் குழலிசைக்கொப்ப இனிய குரலில் பஞ்சம ராகம் பாடிக்கொண்டே அவனை இறுகத் தழுவுகின்றாள்.

மற்றொரு இடையர்குலப் பெண்ணொருத்தி அழகியதும் சுழல்கின்றதுமான கடைக் கண்பார்வையால் மதுசூதனின் முகத்தாமரையை, அழகைத் தன் பார்வையால் பருகுகிறாள். அந்த வடிவழகனைத் தன்னை மறந்து ஆழ்ந்து தியானிக்கிறாள். ஒரு கோபிகை கண்ணனின் காதில் ரஹஸ்யம் சொல்லுவது போல அவன் கன்னத்தில் முத்தமிட அந்த அன்புச் செயலால் கண்ணனுக்கு மயிர்கூச்சம் ஏற்பட்டது. அந்த யமுனை நதிக்கரையில் விளையாட ஆசைப்பட்ட ஒரு கோபிகை வஞ்சலக்கொடிகளின் புதர்களில் மறைந்திருந்த அந்தக் கண்ணனின் பட்டுத் துணியைப் பிடித்து இழுத்துச் செல்கிறாள். மற்றொருத்தி அழகாகப் பாதம் வைத்து ராஸ மண்டலத்தில் நடனமாடிக் கொண்டும் கண்ணனின் குழலிசைக்கேற்ப கைகளினால் தாளம் போடும் பொழுது அவள் கைகளில் அணிந்துள்ள வளையல்கள் கலகலவென்று இசைந்து ஒலியையெழுப்புகின்றன. கண்ணன் ஒருத்தியை அணைத்துக் கொள்ளுகின்றான். மற்றொருத்தியை முத்தமிடுகின்றான். புன்முறுவல் காட்டும் ஒருத்தியை விருப்புடன் பார்க்கிறான். ஒருத்தியின் பின் தொடர்ந்து செல்கிறான்.

கரதல தாள தரல வலயாவலி
கலித கலஸ் வனவம்சே
ராஸ ரஸே ஸஹந்ருத்யபரா
ஹரிணயுவதி ப்ரசஸம்ஸே
ச்லிஷ்யதிகாமபி சும்பதி காமபி
ரமயதி காமபிராமாம்

*பச்யதி ஸஸ்மித சாருதராம்*
*அபராமனு கச்சதிவாமாம்*

மென்மையான கைகளினால் அணைக்கப்பட்ட கணக்கற்ற கோபியர்களால் சூழப்பட்ட கண்ணன் பரவசத்துடன் அசைந்தாடும் பொழுது அவனது கைகள் கால்கள் மார்பு முதலியவற்றில் அணிந்துள்ள அணிகலன்கள் தம்முடைய ஒளியினால் இருளை அகற்றுகின்றன. காதுகளில் அணிந்துள்ள மகரகுண்டலங்களினால் கன்னங்கள் ஒளிபெறுகின்றன. ஜய தேவகவி நம்மவர்க்குச் சொல்கிறார். இந்த ராஸ லீலையைப் படிப்பதனாலும் கேட்பதாலும் ஸ்ரீஹரியை தியானிப்பதனாலும் நம்மவர்க்கு நன்மையே உண்டாகும் என்கிறார்.

கோபியர்கள் கைகளால் தோளுக்குத் தோள் இணைத்துக்கொண்டு கண்ணனுடைய புகழைப் பாடிக்கொண்டு ஆடுகிறார்கள். அங்கங்களின் உள்ளும் வெளியிலும் மாதவன் விளங்குகிறான். தேவகியின் மைந்தனும் கம்சனுக்கு எதிரியுமான ஸ்ரீகிருஷ்ண பகவான் நாதப்ரம்மமான குழலூதுகிறான். கோபியர்களெல்லாம் மெய்மறந்து ஆடுகிறார்கள்.

*அங்கனாம் அங்கனாம் அந்தரே*
*மாதவ:*
*மாதவம் மாதவஞ்ச அந்தரேணங்கனா:*
*இத்தமாகல்பிதே மண்டலே மத்யக:*
*ஸஞ்சகௌவேணுனா தேவகீநந்தன*
*கேகிகே காத்ருதா கேகபங்கேருஹ*
*லீன ஹம்ஸாவளீ ஹ்ருத்யதா*
*ஹ்ருத்யத:*
*கம்சவம்சாடவி தாஹதா வானவ:*
*ஸஞ்சகௌ வேணுனா தேவகீநந்தன:*

சூரதாஸர் என்ற மராட்டிய கவி ஸ்ரீகிருஷ்ணனின் ராஸ லீலையைப் பாடி மகிழ்கிறார். கோபியர்கள் கோபாலனுடன் அதிலும் ஏழுவயதிற் குட்பட்ட பாலகிருஷ்ணனுடன் ராஸலீலை நடைபெறுகிறது. அந்த இடமே ராஸலீலை மந்திராக கோவிலாக விளங்கக் காண்கிறார். த்ரும த்ரும என்ற மிருதங்க ஒலியுடனும் சலங்கையொலியும் சேர்த்து ஒலிக்கக் காண்கிறார். நாமும் அவர் பாடுவதைக்கேட்போம்.

*கோபி கோபால லால ராஸ*
*மந்திரமாஹி*
*தத்தாதேயி தாஸுதங்க நிரதத*
*கஹுபாஹி*
*த்ருமத்ருமத்ரும த்ரும ம்ருதங்க*
*சனனன னன ரூபரங்க*
*உகடத ரஸனாயி*
*சகித தகித ஜமுனாதீர*
*ககம்ருககஜக மகசரீர*
*தன்ய நந்தகே குமார*
*பலி பலி ஜால சூரதாஸ*
*ராஸ ஸுக்தி ஹாரஹி*

ராஸலீலை மிக சுகத்தைத் தருகிறது என்று ஆச்சரியப்படுகிறார் சூரதாஸர்.

கண்ணன் ஸ்ரீராதையுடன் யமுனா நதிக்கரையில் பிருந்தாவனத்தில் கையை கை விரல்களை சங்கிலிபோல் இணைத்து ஊஞ்சல் அசைந்தாடுவதுபோல் ஆடுகின்ற காட்சியை மாதா மீரா பாடி மகிழ்கிறார்.

*ஜுலதராதா ஸங்ககிரிதர*
*அபீரகுலாலகி தூமம சாயி*
*பரபிச காரி ரங்க கிரிதர*
*லால பயி ப்ருந்தாவந ஜமுனா*
*கேசர சூல்த ரங்ககிரிதர*
*நாசத தாள அதாரஸுரபர*
*திமிதிமிபாஜே ம்ருதங்ககிரிதர*
*மீராகே ப்ரபு கிரிதர நாகர*
*சரண கமலகூ தங்க கிரிதர*
*மோஹன முரளீ புஜங்ககிரிதர*

கோலாட்டம் போட்டு ஆடுதல் என்னும் விளையாட்டும் ராஸலீலையாகும். இதனை பத்ராத்ரி என்ற பக்தர் பாடி மகிழ்கிறார். நாமும் அதனைக் கேட்டு மகிழ்வோம்.

*முரஹர நகதர கோவிந்த முகுந்த*
*மாதவ கோவிந்த*
*வாஸுதேவ வனமாலாதர*
*வைகுண்டாதிப ராம*
*புண்டரீகாக்ஷா கோவிந்த புராண*
*புருஷா ராமா*

*புண்யஸ்லோகாபூர்ண ரூப*
*பூதனா முக்தித ராமா*

ஸ்ரீகிருஷ்ண பகவான் முரன் என்னும் அஸுரனை அழித்ததைக் கூறியுள்ளார். பத்ராத்ரி வாஸருக்கு பத்ரகிரி என்ற பெயரும் உண்டு. கோபியர்கள் குழுமி கண்ணனின் புகழ்பாடி ஆடினார்கள். அது குழுமி அடித்தல் கும்மியடித்தல் என்றாகியது. "தேவாதி தேவர் புகழ் பாலனடி ஏலேலோ" போன்ற பாடல்கள் கும்மிப்பாடல்களாயின.

பகவான் ஸ்ரீகிருஷ்ணன் கோகுலத்தில் செய்த லீலைகள் பலப்பலவாகும். முக்கியமாக தோழர்களுடன் சேர்ந்துகொண்டு கோபியரகளின் வீடுகளுக்குச் சென்று அவர்கள் அறியாமல் தயிர், பால், வெண்ணெய் முதலியற்றைத் திருடி தானும் உண்டு மற்றவர்களுக்கும் கொடுத்து மகிழ்வான். அஃதாவது ஆயர்பாடி ஆயர்களின் செல்வம் வெண்ணெய் முதலியனவாகும். உண்ணும் பொருளாகிய அவைகளைப் பிறருக்குக் கொடுக்காமல் வறிதே சேர்த்துவைத்தல் ஆகாது என்பதை எடுத்துக்காட்டவே அவ்விதம் செய்தார் என்பர். அஃது அறச்செயலே என்பர்.

அதனால்தான் அவரை "நவ னீத சோரா" என்று புகழ்ந்து பாடுகின்றனர். மாடுகள் மேய்க் கத்தானும் சென்ருர். மாடு மேய்க்கும் தொழிலை நாம் இழிவானதாகக் கருதுகின்ருேம். பகவான் ஸ்ரீகிருஷ்ணன் தாமே அந்தத் தொழிலைச் செய்து அதன் புனிதத்தன்மையை உல குக்கு எடுத்துக் காட்டினார். கோபியர்கள் வெண்ணெய் முத லியன திருடும் கண்ணனை நேரில் கண்டு கேட்பதாக உள்ள ஒரு பாடல்,

கண்ணன் மாடு கன்று மேய்த்து
வேணுகானம் பாடுவான்
வெண்ணெய் திருடி தின்பதற்கு
வீடுவீடாய் ஓடுவான்

வீட்டிலுள்ளோர் உறங்குகின்ற
வேளைநோக்கி ஓர்தினம்
வாட்டமின்றி துணிவு கொண்டு
வந்து சேர்ந்தான் மாயவன்
ஊர்ந்து சென்று பூனைபோல
உறியை எட்டித் தொட்டனன்
சேர்ந்தபானை மூடிவீழ்ந்து சிதறி
யோசை கேட்டது
ஆச்சிஅந்த ஓசை கேட்டு யாரடா
என்று கேட்டனள்
கூச்சமின்றி கண்ணனென்றுகூறி
நின்ருன் மாயவன்

எங்கு வந்தாய் என்னவேலை என்று
ஆச்சி கேட்டனள்
எங்களாச்சி வீடுதேடி எய்தினன்
காண அம்மையே
கெட்டிக்காடரன் உறியை எட்டி
கையை வைத்ததேனடா
சட்டிமூடி தட்டி உள்ளே
எட்டிப் பார்த்த தேனடா
ஒன்றுமில்லை என்று கண்ணன்
உண்மை போல பேசுவான்
வெண்ணெய் தன்னில் மொய்
எறும்பை
விரட்டினேன் காண் அம்மையே
பெண்கள் மாயன் விந்தையெல்லாம்
பேசுதற்குக் கூடினர்

வெண்ணெய்தன்னை மாதர்மீதுவீசி
கண்ணன் ஓடினான்.

கோபியர்கள் எல்லோரும் சேர்ந்து யசோதை அம்மையா ரிடம் சென்று பால கிருஷ்ண னின் குறும்புத்தனத்தை எடுத் துச் சொல்லுவது போல புகழ்ந்து பாடுகிருர்கள்.

தாயே யசோதா உந்தன்
ஆயர் குலத்துதித்த
மாயன் கோபாலகிருஷ்ணன்செய்யும்
ஜாலத்தையெல்லாம் கேளடிதாயே
(யசோ)
தையலேகேளடி உந்தன்
பையனைப்போலவே இந்த
வையகத்தில் ஒருபிள்ளை
அம்மம்மா நான்கண்டதில்லை
(தாயே)
காலினில் சிலம்பு கொஞ்ச
கைவளை குலுங்கமுத்து
மாலகளைசைய தெருவாசலில்
வந்து நின்ருன்
வானோர்களெல்லாம் மகிழ
மானிடரெல்லாம் புகழ
நீலவர்ணகண்ணனிவன் நர்த்தன
மாடினான்
பாலனென்று தாவியணைத்தேன்
அணைத்தவுடன்
மாலையிட்டவன்போல் வாயில்
முத்தமிட்டாண்டி
பாலனல்லடியுன்மகன் ஜாலமிக
செய்ததெல்லாம்
நாலுபேர்கள் கேட்கச் சொல்ல
நாணமிக வாகுதடி (தாயே)
முந்தாநாள் அந்திநேரத்தில்
சொந்தமுடன் கிட்டே வந்து
விந்தைகள் அனேகம் செய்து
விளையாடினான் ஒரு
பந்தளவாகிலும் வெண்ணெய்
தந்தால்தான் விடுவேனென்று
முந்தாணியைத் தொட்டிழுத்து
பேராடினான் அந்த
வாசுதேவரை நானும் அடியே
யசோதா மைந்தனென்று
எடுத்தணைத்து மடிமேல்வைத்து '
அவர் சுந்தர
முகத்தைப் பார்க்கும் வேளையில்
வாய் திறக்க

இந்த்ர ஜாலம் இந்த்ரலோகம்
காட்டினானடி (தாயே)

கண்ணனுக்கு அடிமையாக விளங்கிய பாரதியார் கண் ணனின் விளையாடல்களைப் பாடுகிருர். தீராத விளை யாட்டுப்பிள்ளையாம் கண்ணன். அவனால் பெண்களுக்கு ஓயாத தொல்லையாம். அவன் கொடுத்த ஓயாத தொல்லை யெல்லாம் பெண்கள் கோபியர் கள் பேரானந்தத்தில் மூழ்கியி ருந்ததாகும். முனிவர்கள் பரம் பொருளை நாடித் தவம் செய் தனர். ஆனால் கோபரும் கோபியரும் பரம்பொருளாகிய? ஸ்ரீகிருஷ்ணனுடன் விளையாட லாகிய தவத்தினைச் செய்தனர் எனலாம்.

தீராத விளையாட்டுப் பிள்ளை
கண்ணன்
தெருவிலே பெண்களுக்கோயாத
தொல்லை (தீராத)
தின்னப் பழங்கொண்டு தருவான்
- பாதி
தின்கின்ற போதிலே தட்டிப்
பறிப்பான்
என்னப்பன் என்னையன் என்ருல்
- அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக்
கொடுப்பான்
தேனொத்த பண்டங்கள் கொண்டு
- என்ன
செய்தாலும் எட்டாத
உயரத்தில் வைப்பான்
மானொத்த பெண்ணடி என்பான்
- சற்று
மனம் மகிழும் நேரத்தில்
கிள்ளி விடுவான்
அழகுள்ள மலர்கொண்டு வந்தே
- என்னை
அழஅழச் செய்து பின்
கண்ணை மூடிக்கொள்
குழலிலே சூட்டுவான் என்பான்-
என்னைக்
குருடாக்கி மலரினைத்
தோழிக்கு வைப்பான்

பின்னலைப் பின்னின்று இழுப்பான்
- தலை
பின்னே திரும்புமுன்னே - சென்று
மறைவான்
வண்ணப்புதுச்சேலை தன்னிலே
புழுதி
வாரிச் சொரிந்தே வரித்துக்
குலைப்பான்
புல்லாங்குழல் கொண்டு வருவான்
- அமுது
பொங்கித் ததும்பும் நற்கீதம்
படிப்பான்
கள்ளால் மயங்குவது போலே
- அதைக்
கண்மூடி வாய்திறந்தே
கேட்டிருப்போம்.

அவரது விளையாட்டின்மூலம் பாமரரும் அறிஞர்களும் அறிவு மயங்கி பிரேமை கொண்டு பக்தியில் மூழ்கி அவரைச் சரணமடைந்து பேரின்பப் பெருவாழ்வு பெறுவர். இப்படியாக ஸ்ரீகிருஷ்ண பகவான் நம்மவர்க்கு விளையாட்டின் மூலமாகவும் உபதேசத்தின் வாயிலாகவும் பக்தியை உண்டாக்கினார். இன்றும் அவரது புகழ் பாடும் பாடல்களாலும் உபதேசமாகிய பகவத் கீதை முதலியவற்றாலும் நாம் பெரும்பயனடைகறோம். அனுபூதிச் செல்வர்கள் நம்மவர்க்குக் கிருஷ்ணன் சொல்லியதைச் செய், ராமன் செய்ததைச் செய் என்பார்கள். You do What Krishna said, you do like Rama.

பஜனை செய்யும் பாகவதோத்தமர்கள் தீபப் பிரதட்சிணம் செய்யும்போது தம்மைக் கோபியர்களாக நினைத்து பகவானுடைய ராஸலீலைகளில் சிலவற்றைப் பாடியும் ஆடியும் மகிழ்கின்றனர். மகிழ்விக்கின்றனர்.

க்ருஷ்ணாய வாசுதேவாய
தேவகீநந்தனாயச
நந்த கோப குமாராய
கோவிந்தாய நமோ நம:

## தி.தி. தேவஸ்தான புத்தக வெளியீட்டின் மறுபதிப்பு நூல்கள்

### ஸர்வஜனீன ஸர்வதேவதா பூஜாவிதானம்

பழமையான இந்து சமயத்தின் பல்வேறுபட்ட கடவுளர்கள் தம்முடைய மனதில் தங்கும்படிக்கு ஸர்வஜனீன ஸர்வதேவதா - பூஜாவிதானம் அதாவது எல்லோருக்கும் பயன்படும் வகையில் சகல தேவதா பூஜா விதியை இந்துக்களாக பிறந்த நாம் அனைவரும் அறிந்திருத்தல் அவசியம். இந்துக்களின் நலன்கருதி இந்நூலை தி.தி. தேவஸ்தானம் மறுபதிப்பு செய்துள்ளது. இந்நூலின்கண் அந்தர்யாகம் - மானசீக பூஜை ஆசமனம், கண்டா-நாதம், பூதோச்சாடனம்- பூதங்களை விரட்டல், ப்ராணாயாமம், சங்கல்பம், சங்கல்ப விஷயத்தில் கவனிக்க வேண்டியன, கலசாராதனம்-கலசபூஜை, தியானம், தியானத்தின் அங்கங்கள் முதலானவைகளை செய்வதற்கு தகுந்த சுலோகங்களை குறிப்பிடப்பட்டுள்ளன. இந்நூலின் விலை ரூ. 5-00, பக்: 20.

### நித்யாநுஸந்தாநம் (தென்கலை)

எம்பெருமானின் கல்யாண குணங்களிலே ஆழங்கால்பட்ட ஆழ்வார்கள் அருளிச்செய்த ஆராவமுதே நாலாயிர திவ்யப் பிரபந்தம். இந்த நாலாயிரத்தில் மிகவும் தேறினப்பொருளான பாசுரங்களை தொகுத்து அவற்றை தினமும் பாராயணம் செய்யும் வகையில் அதிமுக்கியமாக வகுக்கப்பட்டுள்ள நூலே 'நித்யாநுஸந்தாநம்' எனும் புகழ்பெற்ற வைணவ நூற்களஞ்சியமாகும். இந்நூலில் தென்கலை சம்பிரதாயத்தினர் போற்றிடும் வகையில் ஆழ்வார்கள் பாசுரங்களோடு பூர்வாசாரியர்களான திருவரங்கத்து அமுதனார், அருளாளப்பெருமாள் எம்பெருமானார், விளாஞ்சோலைப்பிள்ளை, மணவாளமாமுனிகள் ஆகியோரது பிரபந்தங்களும், நாலாயிரத்தனியன்களும், அப்பிள்ளை அருளிய வாழித்திருநாமமும் மற்றும் இயற்சாத்து சாத்தமுறை பாசுரங்களும் அமைந்து இன்நூலிற்கு அழகு சேர்க்கின்றன. இந்நூலின் விலை: ரூ. 10/-, பக்: 136.

### நித்யாநுஸந்தாநம் (வடகலை)

இந்நூலில் ஆழ்வார்கள் பாசுரங்களோடு வடகலை சம்பிரதாயத்தினர் அநுஸந்திக்கும் வகையில் ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் அருளிச்செய்த ப்ரபந்தங்களான அதிகார சங்கிரகம், மும்மணிக்கோவை, நவரத்தினமாலை மற்றும் ஆழ்வார்களைப் போற்றிடும் பிரபந்தசாரமும் அமைந்து ஆனந்தம் அளிக்கின்றது. இந்நூலின் விலை: ரூ. 8-00, பக்: 98.

### திருப்பதி வரலாறு (ஆங்கிலம்)

திருமலையில் நித்தியவாசம் புரியும் ஸ்ரீநிவாசனின் பெருமைகளையும் அவன்புகழ் பாடிய பக்தர்களையும் திருமலையின் சிறப்பினையும் சித்திரிக்கும் வகையிலும் திருப்பதி மற்றும் திருச்சானூர் ஸ்தல புராணங்களையும் விளக்கிடும் வகையிலும் இந்நூல் மிகவும் தெள்ளியதாக வடிக்கப்பட்டுள்ளது. இந்நூல் முப்பெரும் பாகங்களாக வெளிவந்துள்ளது. நூலின் ஆசிரியர்: திரு. டி.கே.டி. வீரராகவாச்சாரியார் ஆவார். இந்நூலின் முதல்பாகம் விலை ரூ. 37/-, இரண்டாம் பாகம் விலை: ரூ.30/-, மூன்றாம் பாகம் விலை: ரூ. 10/-.

முழு விவரங்களுக்கு :

மக்கள் தொடர்பு அலுவலர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமாநுஜர்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

சங்கு சக்கரங்களால் பொறித்துக்கொள்வது குறித்துச் சாமவேதம் கூறுவதாவது:

சம்சாரமாகிய சாகரத்தைத் தாண்ட உத்தமமானவர்கள் திருமாலின் திருச்சின்னங்களாகிய சங்கு சக்கரங்களைத் தம் தோள் மீது பொறித்துக்கொள்கின்றனர். சிலர் இத்திருச்சின்னங்களைத் தம் அங்கமெங்கும் தரித்துக்கொள்கின்றனர்.

அக்கினியில் சிவக்கக் காய்ச்சப் பெற்ற செப்புத்தகட்டில் பொறிக்கப்பட்ட சங்கு சக்கர முத்திரையை இரண்டு தோள்களிலும் தரிக்கப்பெற்றவர் பிரம்மசாயுச்சியம் பெற்றுப் பிரம்ம லோகத்தில் வாழ்வர்.

பிராமணர்கள், அதிலும் முக்கியமாக வைணவர்கள் பூணூல் தரித்துக் கொள்வதுடன் சங்கு சக்கர முத்திரைகளையும் பொறித்துக்கொள்ளுதல் அவசியம்.

நெற்றியில் திருமண் சாத்திக் கொள்வது (வெள்ளை பகவானது இரண்டு திருவடிகளைக் குறிக்கும், இடையில் இட்டுக் கொள்ளும் ஸ்ரீசூரணம் (ஊர்த்தவ புண்டரம்) இலக்குமியைக் குறிக்கும். இவ்வாறு திருமண் சாத்தித் திருசூரணம் இட்டுக் கொள்பவர்கள் பகவானுக்குப் பக்தராகி முத்தியும் பெற்றுத் திகழ்வர்.

இவ்வாறு திருச்சின்னம் அணிதலின் மேன்மையைச் சாம வேத மேற்கோளாகக் காட்டிய கூரத்தாழ்வார் "நாராயணனையே நம்பி வழிபடுவோர் ஞானம், பலம், ஆற்றல் பெற்றுத் திகழ்வர். மேலும் இவர்களைப் பசி, பிணி, மூப்பு, சாக்காடு முதலியன அண்டுவதில்லை" என்றும் உறுதிபடக் கூறினார்.



நாராயணனே, பரப்பிரம்மம் என்பதையும் நயமுற எடுத்துக் காட்டினார்.

"நாராயண: பரம் பிரம்ம தத்வம்
நாராயண: பரம் ।
நாராயண ஏவேதகும் ஸர்வம்
நிஷ்களங்கோ
நிர்ஞ்ஜனோ நிர்வ கல்போ
நிராக்யாத: சுத்தோ தேவ
ஏகோ நாராயண:
ஏகேஹவை நாராயண ஆஸீத் ।
நப்ரம்மா
நேசா(ப)ன: । நஇமே த்யாவா
ப்ரிதிவீ, நநக்ஷத்ராண
நாபோ நாக்னிர் நயமோ
நசூர்ய இதி" ॥

"மேலான கடவுள் நாராயணரே! அவரே அனைத்துத் தத்துவங்களும்! அனைத்தும் நாராயணரே! அவர் களங்கமற்றவர்; மாற்றலற்றவர்; நாமமற்றவர்; பரிசுத்தமானவர்; ஒளி வடிவினர். அனைத்துக்கும் ஒளி தருபவர் அவரே! ஆதி மூர்த்தி நாராயணர் மட்டுமே! அப்போது நான் முகனோ, சிவனோ, மண், விண், காற்று நீர், நெருப்பு, சூரியன், சந்திரன் என்று எநதத் தேவரும் அப்போது இருந்ததில்லை".

இவ்வாறு வைணவ சமயத்தின் திருசசின்னங்கள், வழிபடும் நாராயணன் பெருமை அனைத்துக்கும் பல்வேறு மேற்கோள்களை வேத, புராண இதிகாசங்களிலிருந்தும் எடுத்துக் காட்டி விளக்கினார்.

மெய்மறந்து இவற்றையெல்லாம் செவிமடுத்த யாதவப்ரகாசர் ஓடோடிச் சென்று இராமாநுசரின் திருவடிகளை இறுகப் பற்றிக்கொண்டு அழுது, அரற்றி நடுநடுங்கிப் பேசலானார்.

"இராமாநுசரே! உண்மையிலேயே நீர் இராமபிரானின் திருத்தம்பியே ஆவீர்! அஞ்ஞானத்தில் மூழ்கி நான் செய்த தவறுகளையெல்லாம் மன்னித்தருள்வீராக! பிறவிப்பெருங்கடலைத் தாண்டத் தோணியாகத் தாங்களே இருந்து என்னைக கடைத்தேற்றல் வேண்டும்! உம்மையே சரண் எனப்புகுந்து விட்டேன்!" என்று நாத்தழுதழுக்கக் கூறியவாறே பணிந்த

தம் குருவாகிய யாதவப்ரகாச ரைத் தூக்கி நிறுத்தி மார்பு றத் தழுவி அவருடைய மனதை அமைதிப்படுத்தினார்.

பின்னர், யாதவப்பிரகாசர் இராமாநுசரிடம் சந்நியாசம் பெற்றுக் கிருதார்த்தர் ஆனார். திருமண் காப்புத் தரித்துக் கொண்டு பஞ்ச சம்ஸ்காரங் களால் தூய்மையாக்கப்பெற்று 'கோவிந்த ஜீயர்' என்னும் தாஸ்ய நாமமும் பெற்றுர்.

"மகாநுபாவரே! தற்போது மனமாசகன்று பளிங்குபோல் காணப்படுகின்றீர்! 'சந்நியாசி யின் கடமை' என்பது பற்றி நூல் இயற்றுக! மனம் சாந் திபெறும்" என்று யதிராசர கூறினார். சிலகாலத்துக்குப் பின்னர் 'எதிதரும சமுச்சயம்' என்னும் நூலை இயற்றி யாத வர் இராமாநுசரின் திருவடிக ளில் சமர்ப்பித்தார். அப்போது யாதவப்ரகாசருக்கு வயது எண் பது. குருவுக்கும் குருவாக விளங்கிய யதிராசரின் புகழ் மேலும் பரவலாயிற்று.

## உடையவர்!

ஆளவந்தாரைச் சிந்தித்தும், அருளாளப் பெருமாளைத் தியா னித்தும் காஞ்சி அனந்தபுஷ் கரணியில் மூழ்கித் "துறக்கத் தகுந்தவற்றையெல்லாம் துறந் துவிட்டேன்" என்று மும்முறை கூறி, காவியுடைதரித்து, முக் கோல் ஏந்தி முகப்பொலிவுடன் விளங்கிய யதிராசரின் துறவுக் கோலத்தில் மயங்கி நாள்தோ றும் அடியவர்கள் யதிராசரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அருளமுதம் உண்டு மகிழ்ந்த னர்.

முதலியாண்டானும் கூரத் தாழ்வாரும் யதிராசரிடம் பஞ்ச சம்ஸ்காரம் அருளப்பெற்றது டன், வடமொழி தென்மொழி சாத்திரங்களின் அரும் பொரு ளையும் அடியார்கூட்டத்து டன் நாள்தோறும் கேட்டு வர லாயினர். இந்தக் கோஷ்டி யில் இருந்து மகிழத்தக்க தம்பி கோவிந்தர் இங்கே இப்போது இல்லையே என்று யதிராசரின் மனம் கவன்றது!

நிற்க, ஆளவந்தாரின் மறை வுக்குப் பிறகு திருவரங் கத்து மடத்துக்குத் தலைவராக விளங்குவதற்குரியவர் எவருமே இல்லை என்னும் நிலைமை இருந்துவந்தது. பெரியநம்பி கள், திருவரங்கப்பெருமாளரை யர் முதலான கற்றறிந்த மேதா விகளான சீடர்களும் தலை மைப் பதவிக்குத் தக்கவராயி ருப்பினும், இவர்களெல்லாம் தங் கள் மனத்தகத்தே வீற்றிருக் கும் மாமேதையான குருவாகிய ஆளவந்தாரை நினைத்து உருக முடிந்ததே தவிர தலைமைப் பொறுப்பேற்க யாருக்கும் மனம் வரவில்லை.

இந்நிலையில், இவர்களுக்கு யதிராசரின் நினைவு வந்தது. யதிராசரைப் பற்றி அடிக்க டித் தங்கள் குருவாக விளங் கிய ஆளவந்தார் புகழ்ந்து கூறி யதை எண்ணலாயினர். அவ தாரபுருடர் என்று ஆளவந்தா ராலேயே மதிக்கப்பட்ட யதி ராசரை அழைத்து வருவ தென்று திருவரங்க மடத்திலுள் ளோர் அனைவரும் ஒருமனதாக முடிவெடுத்தனர். யதிராசரை அழைத்து வரும் பொறுப்பு பெரியநம்பிகளிடம் ஒப்படைக் கப்பட்டது.

பெரிய நம்பிகள் தம் பத்தி னியுடன் காஞ்சியில் யதிராச ரின் மாடிமேல் தங்கியிருந்ததை யும், தம்மிடம் நாலாயிரத் திவ் யப் பிரபந்தம் பயின்றதையும், பெண்கள் சண்டையால் திருவ ரங்கம் மீண்டதையும் நினைவு கூர்ந்தார்.

இராமாநுசர் துறவு பூண்டு யதிராசராகத் துலங்குகிருர் என்ற செய்தியை முன்பே அவர் கேள்விப்பட்டிருந்தார். தம் சீடர் சந்நியாசம் பெற்ற செய்தி உலகெலாம் பரவியிருப்பதைக் கேட்டுப் பெரிய நம்பிகள் உள் ளம் பூரித்தார். திருவரங்கர் திருமுன் சென்று வணங்கித் தம் வேண்டுகோளை வைத்துப் பிரார்த்தித்தார்.

"அடைக்கலம் என்று வந்த வரைக் காக்கும் திருவரங்கப் பெருமானே! ஸ்ரீஇராமாநுச ரைத் தங்கள் சந்நிதிக்கு அழைத் துக் கொண்டு அவரது சேவை யைத் தங்களுக்காக்கி எங்க ளது மனக்குறையைப் போக் கியருளல் வேண்டும்!"

இவ்வாறு உள்ளமுருகி வேண்டி நின்ற பெரிய நம்பிக ளின் திருச்செவிகளில் படுமாறு திருவரங்கப்பெருமான் திருவாய் மலர்ந்தருளினார்.

"மகா பூரணரே! தெய்வீக இசையில்வல்லவர் திருவரங்கப் பெருமாள் அரையர். காஞ்சிக்கு அவரை அனுப்பி வைப்பீராக! அருளாளப்பெருமான் பொருள் நிறைந்த பாடல்களுக்கு மயங் குபவர், கச்சிப் பெருமான் முன்பு நின்று இச்சையுடன் திருவரங் கப்பெருமாளரையர் பாடுவாரே யானால், அப்பாட்டுக்கு மயங்கி 'யாது வேண்டும்?' என்று கச் சிப்பெருமாள் கேட்பார். 'யதி ராசரே வேண்டும்!' என்று உறுதியுடன் கேட்கச் சொல் லும்! பெருமாள் அருளாணை

யின்றி யதிராசர் கச்சியைவிட்டு வரமாட்டார்!"

திருவரங்கர் திருவாணை கிடைத்துவிட்டது. ஆளவந்தாரின் திருக்குமாரரான திருவரங்கப்பெருமாளரையர் காஞ்சிபுரம் சென்றார். பெருமாள் திருமுன்பு நின்று திவ்யப் பிரபந்தங்களை மனமுருகிப் பாடலானார்.

இசைக்கு மயங்கினார் அருளாளர்! எனவே, "எம்மையும் எம் தேவியையும் தவிர்த்து எதையும் பரிசாகக் கேட்கலாம்!" என்று இயம்பினார்.

"யதிராசரைப் பரிசாகத் தர வேண்டும்!" என்று சட்டென்று பிரார்த்தித்தார். அருளிச் செயல்களில் பித்தரான வரந்தரும் மாமணிவண்ணன் "மோசம் போனோமே!" எனக்கலங்கினார்.

திருக்கச்சி நம்பிகளும் செய்வதறியாது திகைத்தார். வாக்குத்யவரின் திருவடிகளைத் தீண்டப்பெற்றவர்கள் தம்மைக் கிருதார்த்தரென பெறற்கரிய பேறு பெற்றவரென எண்ணிப் பூரிப்படைந்தனர்.

அருகிலிருந்த பெரியநம்பிகளை ஆனந்தக் கண்ணீர் பெருக உடையவர் நோக்கினார்! "தேவரீரின் தொடர்பினாலன்றோ திருவரங்கப்பெருமான் எனக்கு உபய விபூதியையும் அளித்து திருப்பணி செய்யும் பேற்றையும் நல்கினார்!" என்று அருளிச்செய்தார்.

"கலியின் கொடுமை கெடுங்காலம் வந்துற்றது! ஆழ்வார்கள் கனவெல்லாம் நனவாகும் காலம் சமீபிக்கிறது. எனவே, பெருமாளின் ஆணைப்படியே இத்திருவரங்கப்பணிகளையெல்லாம் திருத்தமுறச் செய்தருளீர்!" என்று பெரிய நம்பிகள் வேண்டிக்கொண்டார்.

அன்றுமுதல் "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே!" என்னும் வாழ்த்துரை உண்மையாகும் வண்ணம் உடையவர் தாம் ஆற்றவேண்டிய திருப்பணிகளை ஆராய்ந்தார். தினவிழா (நித்யோற்சவம்), பருவவிழா (பட்சோற்சவம்) மாதவிழா (மாஸோற்சவம்) ஆண்டுவிழா (ஸம்வத்ஸரோற்சவம்) முதலான அனைத்து விழாக்களும் குறையற நடைபெறவேண்டிய பாதுகாப்புகளையெல்லாம் பாங்குறச் செய்யலானார்.

அகளங்க நாட்டாழ்வான் என்பவரும் உடையவருக்கு அணுக்கத் தொண்டராயிருந்து பணிபுரிந்து வரலானார்.

உடையவருக்குப் பெரிய நம்பிகள் த்வயத்திற்குப் பொருள் கூறி விளக்கம் செய்து உடைதவறக்கூடாதே என்பதற்காகப் பெருமாளும் யதிராசரைப் பிரிய மனமின்றிப் பரிசாகத் தந்தார்.

யதிராசரைப் பரிசாகப் பெற்ற அரையர் ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார். முதலியாண்டானும் கூரத்தாழ்வானும் பின்தொடர யதிராசர் திருவரங்கம் நோக்கிப் புறப்படலானார். பிரிவாற்றாது, திருக்கச்சி நம்பிகள் எண்பது ஆண்டுகளைத் தாண்டியவராக இருந்தபோதும் இளங்குழந்தையைப்போலத் தேம்பித் தேம்பி அழலானார்.

அரையர் பின்தொடர யதிராசர் முதலானோர் திருவரங்கம் அணுகினர். வீதிகள் தோறும் கூட்டம்! 'வைணவத் தலைமைக்கு இவரே தக்கவர்' என்று கண்டோர் மகிழ்ந்தனர். பெரிய நம்பிகள் தலைமையில் பெரியதொரு வரவேற்பு யதிராசருக்கு அளிக்கப்பட்டது. யதிராசர் திருவரங்கப்பெருமான் சந்நிதிக்குள் சென்று கரிய மாணிக்கத்தைக் கண்குளிரக்கண்டு கசிந்து நின்றார்.

திருவரங்கர் அவருக்கு உபய விபூதி பதித்வமும் அருளிச்செய்தார். "வாரீர் எம் உடையவரே!" என்று வாழ்த்தி வரவேற்றார் திருவரங்கப்பெருமான்! இகபர சுக லாபம் உடையவராகத் திருவரங்கர் அருள்பெற்றமையால் அன்று முதல் இராமானுசருக்கு - யதிராசருக்கு உடையவர் என்னும் திருநாமம் வழங்கலாயிற்று.

பின்னர், உடையவர் திருமடத்துக்குப் பெருஞ்சிறப்புடன் அழைத்து வரப்பட்டார். பலநாடுகளிலிருந்தும் பக்தி சிரத்தையுடன் வைணவர் பலர் நாள்தோறும் உடையவரைக் கண்டு அருளாசி பெற்று உய்ந்தனர். உடையவருடனேயே உறைந்து வரலானார்.

அவ்வாறு அருள் புரிந்து வரும் போது ஒருநாள் திருவரங்கத்தமுதனார் என்பவர் உடையவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். கோயில் திருப்பணிகள் செய்து வருங்கால் தாம் செய்த பாவங்களைத் திருத்தித் தம்மை அடியவராக ஏற்றுக் கொள்ள வேண்டினார். "இவர் தாழ்வு பாராது இவரைப் பரிபக்குவப்படுத்தி நம் பக்கல் கொண்டு வருக!" என்று ஆழ்வாரை நியமித்தருளினார்.

ஆறுமாதங்களில் அமுதனாரை ஆச்சார்யர் திருவடிக்கு அருகராக்கி ஆச்சார்யர் திருவடிகளில் ஆழ்வார் கொண்டுவந்து சேர்த்தார்.

திருவரங்கர் திருக்கோயில் திறவுகோலைப் பெற்றிருந்த

அமுதனாரின் தாயார் ஆசார்யன் திருவடியடைந்தாள். ஏகாஹத்துக்கு ஆழ்வானை உடையவர் அனுப்பிவைத்தார். அமுது செய்தருளியபின், அமுதனாரின் பொறுப்பிலிருந்த திறவுகோலைப் பெற்று வந்து உடையவரிடம் ஆழ்வார் சமர்ப்பித்தார். அன்றுமுதல் திருவரங்கர் சந்நிதியின் கைங்கர்யங்களை முழுவதுமாக ஏற்று உடையவர் பரிபாலனம் செய்யலானார்.

## கோவிந்தரின் மன(த)மாற்றம்!

திருவரங்கத்தில் கூரத்தாழ்வான், முதலியாண்டான், பெரியநம்பிகள் போன்ற பேரன்புக்குரியவர் பலர் சூழ்ந்திருக்கையில் உடையவருக்கு, தம்பி கோவிந்தரின் நினைவு மேலிட்டது. எவ்வாறேனும் கோவிந்தனை வைணவராக்க அவர் எண்ணினார்

யாதவரால் நேரவிருந்த ஆபத்தினின்றும் தம்மைத் தப்புச் செய்தவரும், பகவத்பக்தி பெரும்புலமை நிறைந்த சிறப்பும் கொண்டு விளங்கும் தம் தம்பி உறவாகும் கோவிந்தரைத் தம் சமயத்தில் சேர்க்கத்திருவுள்ளம் கொண்டார். எனவே, உடையவர் இதற்கொரு உபாயத்தை ஆராயலானார்.

ஸ்ரீசைலபூரண்ர் எனப்படும் திருமலைநம்பிகளின் நினைவு அவருக்கு வந்தது. தம் மாதுலரான திருமலை நம்பிகளுக்குத் தம் எண்ணத்தைக் கடிதம் மூலம் தெரியப்படுத்தி அதை ஒரு பாகவதரிடம் கொடுத்துச் சேர்க்கச் சொன்னார்.

கடிதத்தைப் பெற்ற திருமலை நம்பிகள் தம் சீடர்கள் சிலரை அழைத்துக்கொண்டு காளத்தி சேர்ந்தார். அங்கிருந்த குளக்கரையில் தங்கி வசிக்கலானார்.

வழக்கப்படி, கோவிந்தர், அக்குளத்திற்கு நீராட வந்தார். இரண்டாம் நாளும் வந்தார். குளக்கரையில் தங்கியிருந்த முதிய வைணவரான ஸ்ரீசைலபூரணரைக் கண்டார். அவரைக்குழுமிருந்த வைணவர்களையும் கண்டார். இவர்களின் பொலிவினைக் கண்டு தம் உள்ளத்தைப் பறிகொடுத்தார்.

திருமலை நம்பிகள் தம்சீடர்களுக்குச் சாத்திரங்களின் நுட்பங்கள் குறித்து ஆராய்ச்சிக் கருத்துக்களைக் கூறிக்கொண்டிருந்தார். பூசைக்குப் பூப்பறிக்க மரமேறிய கோவிந்தர் மேலிருந்தபடியே அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

மூன்றுமுறை திருமலை நம்பிகள் கோவிந்தரைச் சந்தித்தார். காளத்தியில் மூன்றும் முறை சந்தித்தபோது திருமலைநம்பிகளின் திருவாய்மொழி வியாக்யானத்தில் மனத்தைப் பறிக்கொடுத்தார். சைவசமயத்திலிருந்து வைணவம் சாரக்கோவிந்தர் முடிவு செய்தார். திருமலை நம்பிகளுடன் திருப்பதி சென்றார். திருமலைநம்பிகள் கோவிந்தருக்கு வைணவ தீட்சை செய்தருளினார். மனம்மாறிய கோவிந்தர் மதமும் மாறினார் என்ற செய்தியைத் திருவரங்கத்திலிருந்த உடையவர் கேட்டு உள்ளம் பூரித்தார்

(தொடரும்

## ஸ்தலத்தின் சிறப்பு

| | | |
|---|---|---|
| திருமங்கலக்குடி | - | மாங்கல்ய பாக்கியம் |
| திருவிடைமருதூர் | - | பிர்மஹத்தி தோஷ நிவர்த்தி |
| பட்டீஸ்வரம் | - | சத்துரு பாத நிவர்த்தி |
| திருக்கருக்காவூர் | - | புத்திரப் பிராப்தி |
| திருக்கடையூர் | - | ஆயுள் விருத்தி |
| திருமணஞ்சேரி | - | திருமணம் கைகூடும் |
| மாயூரம் | - | புண்ணியம் சேர்ப்பிக்கும் |
| திருநாகேஸ்வரம் | - | நாகதோஷம் விலகும் |
| வைத்தீஸ்வரம் கோயில் | - | பிணிகளை தீர்க்க |
| தாயுமானவர் கோவில் (திருச்சி) | - | சுகபிரசவம் காண |
| திருவெண்காடு | - | கல்வி அறிவு, கலைகள் சிறக்க |
| ஆலங்குடி | - | குருதிசை விளைவுகள் விலக |
| திருநள்ளாறு | - | கிரக தோஷம் விலகும் |
| கஞ்சனூர் | - | சுக்கிர திசை விளைவுகளுக்கு நிவர்த்தி |

-தகவல் : கமலவேணி தனபதி - திருச்சி.

# நவதிருப்பதிகள் - ஒருபார்வை

திருமதி. சித்ரா கமல்ராஜ் - திருச்செந்தூர்.

உடலுக்கு ஒன்பது வாயில் நமது ஆன்மா உய்வுபெற ஒன்பது திருவாயில்களாக நவதிருப்பதிகள் அமைந்துள்ளன. ஸ்ரீமன் நாராயணன் வடக்கே ஒரு திருப்பதியில் திருமலை தெய்வம் எனப்பெயர் பெற்று பக்தர்களுக்கு அருள்புரிந்து கொண்டிருக்கின்றான். தெற்கே ஒன்பது திருப்பதிகளை உறைவிடமாகக் கொண்டு அருள்தந்து கொண்டிருக்கின்றான். அந்த ஒன்பது திருத்தலங்களைப் பற்றி ஈண்டு காண்போம்.

## வைகுண்ட ஏகாதசி :

வைகுண்ட ஏகாதசி விஷ்ணு பக்தர்களுக்கு புனிதத் திருநாளாகும். இலட்சக் கணக்கான பக்தர்கள் திருப்பதி, ஸ்ரீரங்கம் போன்ற விஷ்ணு திருத்தலங்களுக்குச் சென்று தரிசித்து சொர்க்க வாசல் திறப்பதைக் கண்டு களிப்பர். அதுபோல் சிதம்பரனார் மாவட்டத்தில் தாமிரபரணி ஆற்றங்கரையின் இருமருங்கிலும் அமைந்துள்ள நவதிருப்பதிகளுக்கும் சென்று இறைவனை தரிசிப்பர். இந்த நவதிருப்பதி தலங்களுக்கு மற்றொரு சிறப்பும் உண்டு. அவை நவக்கிரகத்தலங்களாகவும் விளங்குகின்றன.

| கிரகங்கள் | திருத்தலங்கள் |
|---|---|
| சூரியன் | நத்தம் |
| சந்திரன் | திருப்புளியங்குடி |
| செவ்வாய் | பெருங்குளம் |
| புதன் | ஆழ்வார் திருநகரி |
| வியாழன் | திருக்கோளூர் |
| சுக்கிரன் | திருவைகுண்டம் |
| சனி | தென்திருப்பேரை |
| ராகு, கேது | இரட்டைத்திருப்பதி |

## ஆழ்வார் திருநகரி :

நவதிருப்பதிகளில் முதலாவதாகக் கருதப்பெறுவது ஆழ்வார் திருநகரி. இது தாமிரபணி ஆற்றின் தென்புறத்தில் திருநெல்வேலி திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இவ்வூரின்கண் எழுந்தருளியுள்ள பெருமாள் பெயர் ஆதிநாதர். தாயார் பெயர ஆதிநாதவல்லி. இவ்வூரின்கண் நம்மாழ்வார் அவதரித்த காரணத்தால் இஃது ஆழ்வார்திருநகரி என அழைக்கப்படுகின்றது. நம்மாழ்வார் காரியார் என்ற குறுநில மன்னருக்கும் உடைய நங்கை என்ற அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தார். இவர் பிறந்தபோது எவ்வித உணர்ச்சியும் இன்றி மரக்கட்டை போல் இருநதார். பெற்றோர்கள் இவரை ஆதிநாதர் கோவிலுக்கு எடுத்துச் சென்றனர். கோவிலை அடைந்தவுடன் அந்தக் குழந்தை தவழ்ந்து அங்குள்ள புளியமரத்தின் கீழ் அமர்ந்து கொண்டது. எவ்வித உணவும் இன்றி அக்குழந்தை பெரியவனாக வளர்ந்தது. இவ்வாறு பதினாறு ஆண்டுகள் ஆயின. அப்போது வடநாட்டு யாத்திரையை முடித்துக்கொண்டு மதுரகவி ஆழ்வார் ஆழ்வார்திருநகரி வந்தார். அவர் நம்மாழ்வாரிடம் சில கேள்விகளைக் கேட்டார். அவரும் தக்க நற்பதில்களைக் கூறினார். நம்மாழ்வார் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி என அழகிய நூல்களைப் பாடினார்.

## திருவைகுண்டம் :

இது தாமிரபரணியின் வடகரையில் அமைந்துள்ளது. இதுவும் திருச்செந்தூர் திருநெல்வேலி நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது.

இறைவன் பெயர்: வைகுந்த பெருமாள்

இவருக்கு 'கள்ளபிரான்' என்ற மற்றொரு பெயரும் உண்டு.

தாயார் பெயர்: வைகுந்த வல்லி

மரங்கள் அடர்ந்த காட்டில் காலதூடகன் என்ற கள்வர் தலைவன் மறைந்து வாழ்ந்தான். அவன் திருடுவதையே தொழிலாகக் கொண்டிருந்தான். காலதூடகன் தீயவர்களிடமிருந்து பொருட்களைக் கைப்பற்றி ஏழை எளியவரிடம் வழங்கி வந்தான். ஒருநாள் திருடும்போது அவனது ஆட்கள் அரசனின் காவலாட்களிடம் பிடிப்பட்டனர். அவ்வன் மட்டும் தப்பித்து வந்து வைகுந்த பெருமாள் சன்னதியில் பதுங்கிக் கொண்டான் அவனுக்கு அருள் கொடுக்க பெருமாள் எண்ணினார். பரந்தாமன் காலதூடகன் வேடம் அணிந்து அரச

னிடம் சென்று தன்னை ஒப்ப டைத்துக் கொண்டான். பிறகு அவர் அரசனுக்கு காட்சி கொடுத்து "அறம் செய்யா பொருள் அழியும்" என்ற உண் மையை உணர்த்தவே நான் இங்கு வந்தேன் என்று கூறி மறைந்தார். பகவானது தரி சனம் பெற்ற அரசர் "ஐயா கள்ளபிரானே உனது திருவருள் வழி நானும் நடப்பேன் என்று உரைததான். அன்றிலிருந்து பகவான் கள்ளபிரான் என்று அழைக்கப்பெற்றான்.

வைகுந்தநாதப்பெருமாளின் திருக்கோயில் பெரிய இரா ஜகோபுரத்துடன் அமைந்த பெரிய கோவிலாகும். கோபுர வாயிலில் உள்ளே சென்றால் கொடி மர மண்டபம், கருட மண் டபம், மணி மண்டபம். ஆகிய வற்றைக் கடந்து கருவறையை அடையலாம்.

கருவறையில் பூதேவியும், ஸ்ரீதேவியும் இருபுறமும் நிற்க கள்ளபிரான் அழகிய திருமேனி யுடன் தங்க கவசம் அணிந்து நிற்கின்றார். அவர் மேனியை அமைத்த சிற்பி, அவருடைய அழகில் மயங்கி கன்னத்தை கிள்ளிய இடத்தை அவரது கன்னத்தில் காணலாம்.

இந்த வைகுந்தநாதப் பெருமா ளுககு "பால்பாண்டியன்" என்ற பெயரும் உண்டு. வைகுந்தநா தர் சிலநாட்கள் மண்ணுக்குள் மறைந்திருந்தார். மறைந்திருந்த இடத்தில் பசுககள் பால் சொரிந் தன. அதை அறிந்த மன்னர் இறைவனை வெளிக்கொணர்ந தார். அதனால் பெருமாள் "பால் பாண்டியன்" எனத் திருப்பெயர் பெற்றார்.

இங்குள்ள பரமபத வாசல வைகுண்ட ஏகாதசி தினத் தன்று மட்டும் திறக்கப்படும். கலை வளம் மிக்க சிற்பங் களை கொண்டது. இத்திருக் கோயில் சிற்பக்கலையை விரும் புவோர்க்கு நல்விருந்தாகும்.

## திருவரகுண மங்கை :

(இத்தலத்திற்கு நத்தம் என்ற மற்றொரு பெயர் உண்டு.)

இப்புனிதத் தலம் திருவை குண்டத்திலிருந்து கிழக்கே ஒன் றரை மைல் தூரத்தில் உள் ளது. இவ்வூரில் வீடுகளே இல்லை. இங்கு வீற்றிருக்கும் பெருமாள் பெயர்: விஜயசனப் பெருமாள். ஆதிசேஷன் குடை பிடிக்க வீற்றிருக்கும் திருக்கோ லம். தாயார் பெயர்: உபய நாச்சியார்.

வேதவித் என்னும் அந்த ணர் இத்தலத்தில் விஷ்ணுவைக் குறித்து தவமிருந்தார். பக வான் அவருக்கு காட்சி கொடுத் தார். அவரின் விருப்பப்படி விஜயாசர் எனப்பெயர் பெற் றார்.

## திருப்புளியங்குடி :

வரகுணமங்கையிலிருந்து சுமார் அரை மைல் தூரத் தில் அதே சாலையில் சென்று அடையலாம். இறைவன் பெயர்: காய்சின வேந்தன்; தாயார் மலர் மகள் நாச்சியார்.

பெருமாள் திருவயிற்றிலி ருந்து தாமரைக்கொடி தனியா கக் கிளம்பிச் சென்று சுவரில் உள்ள பிரம்மாவின் தாமரை மலருடன் சேர்ந்து கொள்கிறது. இந்தக் காட்சித் தான் கருவ றையில் உள்ளது. கோவிலுக்கு வெளியே ஒரு சன்னல் வழி யாக பார்த்தால் இறைவனு டைய பாதம் நன்றாகத் தெரி யும். இந்தத் தலத்தில் இறை வன் படுத்திருக்கும் திருக்காட் சியைக் காணலாம்.

## திருக்குடந்தை :

இத்தலத்தினை 'பெருங்குளம்' என்றும் அழைப்பர். இது திருப் புளியங்குடியிலிருந்து ஆறு மைல் தூரம் உள்ளது. இங் குள்ள மூலவர்: ஸ்ரீநிவாசன் நின்ற திருக்கோலம் தாயார்: அலர்மேல் மங்கை.

வேதசாரன் என்ற அந்தண னுக்கு பாலிகை என்ற பெண் குழந்தை பிறந்தது. அவள் மகா விஷ்ணுவின் மேல் பக் திக்கொண்டு அவரையே கண வனாக அடையத் தவம் செய்தாள். பாலிகை தவம் செய்த இடமாகையால் அதற்கு 'பாலிகை வனம்' என்ற பெய ரும் உண்டு. இத்தலத்தில் அம்பசாரன் என்ற அசுரனை, பகவான் பிடித்து தரையில் மோதி, அவனைப்போல் நாட்டி யமாடி சம்கரித்து மாயக்கூத்து ஆடியதால் இங்குள்ள இறைவ னுக்கு 'மாயக்கூத்தன்' என்னும் பெயர் வந்தது.

## திருக்கோளூர் :

தென்திருப்பேரையிலிருந்து ஆழ்வார் திருநகரி வரும் வழி யில் சுமார் ஒன்றரை மைல் தூரததில் தெற்கே உள்ளது. இங்குள்ள சுவாமி பெயர்: வைத்த மாநிதி தாயார் பெயர்: குமுதவல்லி.

பார்வதியால் குபேரன் சபிக் கப்பட்டதால் அவன் செல்வங் களை இழந்தான். அவன் இத் தலததில்வந்து சுவாமியை தரி சித்து இழந்த செல்வத்தை மீண டும் அடைந்தான். இது மது ரகவி ஆழ்வார் பிறந்த ஊர்.

## தென்திருப்பேரை :

ஆழ்வார்திருநகரியிலிருந்து சுமார் மூன்றரை மைல் தொலைவில கிழக்கே உள்ளது. இங்குள்ள மூலவர்பெயர்: மகர நெடுங்குழைக்காதன் தாயார்: குழைக்காது வல்லிநாச்சியார்.

துருவசா மகரிஷி பூமா தேவியை லக்ஷ்மியைப்போல் இருக்க அருளினார். அவர் உபதேசித்த அஷ்டாவக்ஷரத்தை ஜபித்துக்கொண்டு பூமாதேவி ஸ்ரீபேரை (லக்ஷ்மியின் உடல்) என்னும் நாமத்தை அடைந்தாள். பின்பு அவள் பௌர்ணமி தினத்தன்று தாமிரபரணியில் தர்ப்பணம் செய்து கொண்டு இருக்கும்போது மின்னல் போல் வடிவமுள்ள இரண்டு குண்டலங்களை கண்டு எடுத்து அதை பகவானுக்கு சமர்ப்பிக்க அது முதல் பெருமாள் 'மகரநெடுங் குழைக்காதன்' என்னும் பெயர் உண்டாயிற்று.

## இரட்டைத்திருப்பதி :

இது திருக்குடந்தையிலிருந்து ஒருமைல்தூரத்தில் உள்ள மங்கலக்குறிச்சி என்ற ஊரிலிருந்து வாய்க்கால் கரையில் உள்ளது. இங்குள்ள இரண்டு கோயில்களும் சேர்ந்தே ஒரு திவ்ய தேசமாக கருதப் பட்டது. இங்குள்ள பெருமாள் 'ஸ்ரீநிவாசன் தாயார் உபயநாச்சியார் இரண்டாவது கோவில்பெருமாள் அரவிந்தலோசன் தாயார்: கருத்தடங்கண்ணி நாச்சியார்.

இக்கோயில்கள் காட்டில் உள்ளன. அண்மையில் வீடுகளோ, மனித நடமாட்டமோ கிடையாது. அத்திடூரயசுரா என்கின்ற முனிவர் இத்தலத்தில் யாசக சாலை உள்ளே ஒளியுடன் கூடிய ஒரு வில்லையும் தராசையும் கண்டார். அதை அவர் கையில் எடுத்தவுடன் தராசு ஒரு பெண்ணாகவும், வில் ஒரு ஆணாகவும் மாறிவிட்டது.

அது குபேரனுடைய சாபத்தால் அவ்வாறு ஆனதாக கூறி மறைந்து சென்றது. அதுமுதல் அந்த ஊர் தொலைவில்லி மங்கலம் என அழைக்கப்பட்டது. இங்கு இரண்டு திருப்பதிகள் இருப்பதால் இவை இரட்டை திருப்பதி என அழைக்கப்படுகிறது.

நவதிருப்பதிகளுக்கும் சென்று இறைவனை தரிசித்து நம் உள்ளத்திற்கு அளவில்லா உவகையும் அமைதியும் பெறுவோம். ◆

## சக்தி-தேவி விசேடத்தலங்கள்

சிவாலயங்கள் சிலவற்றில் திருக்காட்சி தந்தருள்கின்ற தேவியர் விசேடம் மிகுந்து விளங்குகின்றனர். இவ்வாறு விளங்கும் இத்திருத்தலங்களை 'சக்தி விசேடத் தலங்கள்' என்றும் கூறுவர். அவை :

| | | |
|---|---|---|
| திருவண்ணாமலை | - | உண்ணாமுலையம்மை |
| அவிநாசி | - | கருணாம்பிகை |
| திருவாமத்தூர் | - | முத்தாம்பிகை |
| திருவாரூர் | - | கமலாம்பிகை |
| மதுரை | - | மீனாட்சியம்மை |
| திருவானைக்காவல் | - | அகிலாண்டேசுவரி |
| திருவையாறு | - | அறம் வளர்த்த நாயகி |
| திருவொற்றியூர் | - | வடிவுடையம்மை |
| காஞ்சிபுரம் | - | காமாட்சியம்மை |
| திருக்கழுக்குன்றம் | - | திரிபுரசுந்தரியம்மை |
| திருக்காளத்தி | - | ஞானப்பூங்கோதையம்மை |
| குடந்தை | - | மங்களநாயகி |
| குற்றாலம் | - | குழல்வாய்மொழியம்மை |
| திருச்சிராப்பள்ளி | - | மட்டுவார்குழலியம்மை |
| திருநள்ளாறு | - | போகமார்த்த பூண்முலையம்மை |
| நாகபட்டினம் | - | நீலாயதாட்சியம்மை |
| திருநெல்வேலி | - | காந்திமதியம்மை |
| திருப்பாதிரிப்புலியூர் | - | பெரியநாயகி |
| வைத்தீஸ்வரன்கோயில் | - | தையல்நாயகி |
| வேதாரணியம் | - | யாழ் பதித்த மொழியம்மை |
| வடிதிருமுல்லைவாயில் | - | கொடியிடைநாயகி |

தொகுத்தவர்: திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

# சிரவண பெளிகுளத்து கோமடேஸ்வரர்

லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

கி.மு. 6ஆம் நூற்றுண்டு பகவான் பார்சுவநாதரின் சமய போதனைகள் அவர் சீடர்களிடம் மாத்திரமே பரவியிருந்த காலமது. விதேக நாட்டின் - வைசாலி நகரத்தில், காஸ்யப கோத்திர, குந்தபுரவாசி சித்தார்த்தருக்கும் அவர் பத்னி திரிசலாவுக்கும் புதல்வனாய் உதித்த வர்த்தமானர் (வளம் வழங்குபவர்) நித்தியத்தை நாடி கடுந்தவமியற்றி ஒரு சாலமரத்தின் கீழ் ஞானமடைந்து - ஞானச்சுடர் விளக்கேற்றி - பிரபஞ்சத்திற்குத்தன் கொள்கைகளைப் போதித்து - மகாவீரர் என்ற புனிதப் பெயருடன் விளங்கி கி.மு. 447ல் "பாவா" எனுமிடத்தில் (பாட்னாவுக்கருகில்) தன் 72 வது வயதில் பரி நிர்வாணமடைந்தார்.

பார்சுவ நாதர் விட்டுச் சென்ற சம்பவத்தைப் பலர் பங்காக்கிய இம்மகாவீரரால் இறுதிக்காலத்தில் ஈர்க்கப்பட்டவர்கள் 14,000 துறவிகள், 55,000 இல்லறத்தார், 36,000 பிக்ஷுணிகள், 3,18,000 இல்லத்தரசிகளுமாவர்.

கணம் என்ருல் குழு. சமணத் துறவிகளான குழுவிற்கு முதல் தலைமை வகித்தவர் கணதரர் - மகாவீரரின் நேர்சீடரான கவுதம் இந்திரபூதி, இவ்வழித் தோன்றலில் ஆறுவது அமைந்தவர் ஜைன சமயத்திலேயே மகாவீரருக்கு அடுத்த ஸ்தானம் வகித்த மாபெரும் ஞானி பாகுபலி, சந்திரகுபத மௌரிய மன்



னரின் சமகாலத்தவரான இம்முனீஸ்வரரின் காலம் வெகு முக்கியகட்டமாகும் என்பதை வடமதுரைப் பிரதேச சத்திய கல்வெட்டு சாஸனங்கள் விளம்புவதுடன், சரித்திரப் பின்னணியையும் ஏற்படுத்துகின்றது.

மகத நாட்டிலும் - கங்கை வெளிப்பிரதேசத்திலும் அடங்கிக் கிடந்த சமணம் ஒரு பெரிய அலையாய் நுங்கும் நுரையுமாய் எழும்பி - கர்நாடக, திராவிட நாடுகளில் வெகு வேகமாக மோதியது. மன்னர்கள் பலர் சமணர்களாகி ஜைனத்தை அரச சமயமாக்கினர். இலக்கியம், இலக்கணம், புராணம், காப்பியம், கணிதம், தத்துவம் இவைகள் மறுமலர்ச்சியுற்றன.

கங்கர், ராஷ்டிர கூடர், சாளுக்கியர், கடம்பர், போசளர் இப படி கர்நாடக மனனர்கள் யாவரும் சமண கோஷம் ஒலித்தனர். பல மன்னர்கள் சமண இலக்கிய கர்த்தாவாகவும் விளங்கினர். காலடியில் அவதரித்த ஆதிசங்கரரின் ப்ரச்ஞோத்ரரத்ன மாலிகாவைப் போல அமோக வர்ஷன் (கி.பி. 818-877) சமணச் சார்பில் மற்ருெரு ப்ரச்ஞோத்தரம் இயற்றினான்.

கர்நாடகம் எங்கிலும் சமணச் சின்னங்கள், ஸ்தம்பங்கள், பஸ்திகள் எழும்பின. இப்படி ஜைனம் தெற்கே தழைக்க மூல புருஷாராயிருந்த பாகுபலிக்கு கர்நாடகத்தில் மைசூருக்கருகில் உலகமே வியக்கும் வண்ணம் ஒரு அற்புதச்சிலை எடுப்பித்தது களாகவும் மாறிவிட்டன எனறு அணியேற்றிக் கூறுவது மரபாயிற்று.

இத்தகைய மைசூர் கங்க அரசர்களுள் ராஜமல்லன் ஒருவன் (974-984) அவன் அமைச்சனும், தளபதியுமான சாமுண்டராயன் ஒரு தீவிர ஜினன். வடமொழி, கன்னடங்களில் புலமை பெற்ற நல்லகவிஞனும் கூட! பல ஜினாலயங்களை எழுப்பியதோடு "சரித்திர சாரம்" என்ற நூலையும் இயற்றியவன். இவ்வுலகிலேயே மகா அதிச

யம் எனத்தக்க இக்கோமடேஸ்வர் சிலையையும் நிர்மாணித்தவன் இவனே! "கோமட்" என்பது இவன் குடும்பப்பெயர். அதனாலேயே இச்சிலைக்கும் "கோமடேஸ்வரர்" என வழங்கப்பட்டது என்று கருதுவாரும் உண்டு.

"வொப்பண" என்ற ஜைன மகாகவி கன்னடத்தில் புனைந்ததை இங்கு கல்வெட்டு சாஸனமாகி கோமடேச்வரர் சிலை எழுப்பியதாக காரணத்தைக் காட்டுகிறது. பாகுபலிக்குப் பரதேஸ்வரரால் பௌந்தன புரத்தில் சிலை நிறுவப்பட்டது என்பதே அதன் முக்கியசாரம். ஜினசேனாசாரியார் என்ற யதி சாமுண்டராயன் அன்னையிடம் அப்புராணத்தை எடுத்துக்கூற, அப்பிம்பத்தை நேரில் கண்டாலன்றி பால் பருகுவதில்லை எனத்துணிந்த தன்னைப் பெற்றெடுத்த தாய்க்கு அச்சிலையைக் கண்டு காட்ட கிளம்பிவிட்டார் அம்மைந்தன்.

வழியில் "பெளி" குளமடைய அசரீரியாய் அச்சிலையை சென்று காணமுடியாது. ஆனால், இங்கேயே தரிசனம் அளிப்பார் என ஒலிக்க, அதன்படி அன்னைக்கும் - மகனுக்கும் இந்திரகிரி உச்சியில் க்ஷணநேரம் காக்ஷி அளித்து மறைந்துவிட்டார். நினைவில் தேங்கிய அவ்வடியை கல்லில் வடித்து புகழ் அடைந்தான் சாமுண்டராயன். அரிஷ்டநேமி என்ற ஸ்தபதி - வைர உளி ஏந்தி பர்வதத்தைச் செதுக்கி ஒதுக்கி 58 அடி உயரம் இடுப்பு 10 அடி அமைத்து, புன்முறுவல் தவழும் கம்பீரவதனம், திகம்பரநிலை, வடக்குதிசைப்பார்வை, சுருண்டு அலைபாயும் கேசம், உலகை மறந்தநிலை.

புற்றுக்களும் செடிகளும் படர, வடித்துள்ள பிரதிமம் நம்மை இமை தெரியாத இன்பத்தின் சாரத்தை உணர்த்துகிறது. விபவ ஆண்டு சித்திரைமாதம், பஞ்சமி ஞாயிறு அன்று புனிதப் பிரிதிஷ்டை வெகு கோலாகலமாக நிறைவேறியது. (கி.பி. 1028) என்பது முக்கிய குறிப்பாகும். பல ஜைன மன்னர்களும், துறவிகளும், மக்களும் வந்து விழாவில் கலந்து கொண்டதாகவும் அன்று உயரே கருடன் வட்டமிட்டு ஆசி கூறியதாகவும், மன்னர் வந்திருந்த சேவார்த்திகளுக்கு தான தர்மங்கள் செய்ததாகவும் கூறப்படுகிறது. இதைச் செப்பேடுகளும் கல்வெட்டுக்களும் செப்புகின்றன.

இச்சிரவண பௌகுளா-மைசூருக்கு வடக்கே 50 மைல் தூரத்திலும், பெங்களூருக்குச் சற்று மேற்கே 100 கல்லிலுமாக ஒரு குக்கிராமமாய் காக்ஷியளித்த போதும் அக்காலத்தே பெரிய யாத்திரைத்தலமாய் விளங்கியது. பின் வந்த மன்னர்களுள் பிட்டிதேவன், ராமானுஜர் வருகையால் வைணவனாகி விஷ்ணுவர்த்தனன் எனும் வெகு பொருத்தமே!

விந்திய பர்வதத்திற்குத் தென் திசையில் சமணம் மணக்க ஏதுவாயிருந்த இப்பாகுபலி யார்? இவர் சரித்திரம் என்ன? அஹிம்ஸை, சத்தியம், ஆஸ்தேயம், பிரம்மசர்யம், அபரி, கிரகம் என்ற மகாவீரரின் ஞானசுருதிகளை நேராக அப்யஸித்தவர்களிடம் பயின்ற கடைசி சீடனான பாகுபாலி மௌர்ய மன்னன் சந்திர குப்தனுக்குக் குருவானார். சந்திர குப்தன் பத்ரபாகுவின் சீடன் என்று ஹரிசேனனின் (கி.பி. 931) பிருகத் கதாகோசம் எனும் நூல் குறிப்பிடுகின்றது.

இச்சமயம் நாட்டை ஒரு கொடிய பஞ்சம் வாட்டப்போவதை பாகுபாலி நன்கு உணர்ந்தார். அதன் பலன் சமணச் சமயிகள் இருபெரும் பிரிவாகி ஸ்தூலபத்திரர் தலைமையில் மேற்றிசைக்கும், பத்ரபாகு தலைமையில் 12,000 துறவிகளும், தென்திசைக்கும் நகர்ந்தனர். மன்னன் சந்திரகுப்தனும் அரச பீடத்தை உதறித் தன் குருநாதரைத் தொடர, அக்குழு மைசூருக்கு வடக்கேயுள்ள "பெளிகுளத்து மலை"யில் தங்கிவிட்டனர்.

விசாகாசாரியார் என்பவரை ஆசாரியனாக்கிப் பல சீடர்களை நியமித்து சோழ, பாண்டிய நாடுகளுக்கு அனுப்பிவிட்டு, ஜைன மதத்தை வேரூன்றச் செய்தபின், புவியில் தன் கடமை முடிந்தது அறிந்து "சல்லேகன விரதம்" ஏற்றுத் தன் வாழ்வை முடித்துக்கொண்டார். வாழ்க்கைப் பாதையை மாத்திரமின்றி, இறுதியை எதிர்நோக்குவதையும் ஒரு கலையாய், ஒரு புனிதச் சடங்காய் அமைத்த பெருமை சமணர்களுக்குண்டு. தன் ஆசானின் மறைவுக்குப் பின் சந்திரகுப்தன் 12 ஆண்டுகள் தவம் ஏற்று, பெளிகுளத்து சிறிய மலையில் வாழ்ந்து முடிவில் சல்லேகனம் மேற்கொண்டார். "ஸ்ரவண" என்ற வடசொல்லுக்குத் திகம்பர ஜைனத்துறவி என்பது பொருள்.

வெண்மை என்ற அர்த்தம் அளிப்பது "பெள" என்ற கன்னட பதம் "குளா" என்றால் குளம். இந்திரிகிரி, சந்தி

ரகிரி என்ற இருமலைகளுக்கிடையே ரமணீயமாகக் காணப் படும் "கல்யாணி" என்ற தடாகமே வெள்ளைக் குளமாக விளங்கி "சிரவண பெளிகுளா" என ஊருக்கும் அமைந்தது. அழகுக்குறைவிடம் மன்மதன். பகவான் பாகுபலி மதனனை மிஞ்சும் அழகுபொருந்தியவர் - சௌந்தர்ய தேவர் என நூல்கள் புகழ்ந்து பேசுகின்றன.

மதனன் மம்மட் ஆகி "கோமட்" என்று மருவிவிட்டது. ஜைனர்களின் காசியான இக் கோமட்புரியில் நின்று அருளும் கோமடேஸ்வரரைப் பற்றி இயற் றப்பட்ட புராணங்கள்- இதிகா ஸங்கள் அனந்தம், "இராஜாவளி கதே, முனவம்சாப்யுதயம், புஜ பலி சதகம், கோமடேச்வர சரிதம்" என இப்படி பற்பல உண்டு.

கர்நாடகத்தில் தலையெடுத்த சமணம் 4ம் நூற்றாண்டிலிருந்து 11ஆம் நூற்றாண்டு வரை உன்னத நிலையிலிருந்தது. கங்கர் காலத்தில் ஜினாலயங்கள் எழும்பியதையொட்டி, கல்லுக் குச் சூளைபோட மண்ணெடுத்த குழிகள் - குளங்களாக, கருங்கல் வெட்டியதால் குன்றுகள் சமவெளிகளாக, அப்பாரங்களை ஏற்றிச் சென்ற வண்டிகளின் சுவடுகள் அழுத்தி அழுத்தி நதி நாமமும் பூண்டான். இருப்பினும் சமணம் ஒதுக்கப்பட வில்லை. கோயில்களுக்குக் காட்டிய பரிவும் குறையவில்லை.

கி.பி. 1116ல் அரசன் ஆழ்வாரின் சீடனானான். அரசன் தளபதி கங்கராஜன் இம்மலையில் ஆதிநாதருக்கு ஆலயம் கட்டியது சந்திரகிரி குன்றில் சாந்தளாதேவி, பசதி எழுப்பியது. ஜைனகுரு மது சந்திரருக்குகொடையளித்தது முதலியன பின்னேற்பட்டதுதான் என்பது குறிப்பு. முகுந்தன் திருவடிகளைத் தொழும் மன்னனே "வஸந்ரிகா" என்ற சமண அம்பிகையிடமும் பல வரங்கள் பெற்றான். பார்ச்வநாத பஸ்தியிலிருந்து வந்த புனித பிரசாதங்களை மிகப்பக்தியுடன் ஏற்றான். அவர்களுக்குப் பல பொன்மணிகளைத் தந்து கௌரவித்தான். ஜீனநாதபுரத்தில் கி.பி. 1117ல் எழும்பிய "சாந்திநாதர்" கோயிலைப்போல் சிற்ப நுணுக்கங்கள் கொண்டது வெகுஅரிது.

இக்கோமடேஸ்வரருக்கு முதல் அபிஷேகம் சாமுண்டராயனாலேயே நடத்தப்பட்டது. இது கி. பி. 1390ல் நடந்ததை கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இக்கோமடேஸ்வரர் நிற்கும் முற்றத்திற்கு முன் உள்ள மண்டபத்தே அஷ்டதிக்கு பாலர்களுடன் தேவேந்திரன் தன் ஐராவதத்திலிருந்து இறங்கி கிரீட, குண்டல ஆபரண பூஷிதனாய் இரு கைகளில் அங்குசம் வச்ரமேந்தி, மற்றைய இரு கைகளில் கலசம் தாங்கி மகாமுனிக்கு மஸ்தாபிஷேகம் செய்யும் கோலமே சிற்பமாய் தளத்தில் வடிக்கப்பட்டுள்ளது.

"கல்யாணி" என்ற தெள்ளிய குளத்து நீரில் பிரதிபலிக்கும் இந்திரகிரியின் உயரம் சுமார் 500 அடி. இதன் உச்சியில் ஓங்கி எழும்பி சுற்று வட்டாரத்தில் 15 மைல் விஸ்தீரணத்திற்கு யாவர் காட்சியையும் கவருமாறு நின்று, ஆயிரம் ஆண்டுகளாய் பாரத நாட்டின் சமய உணர்ச்சியை ஊக்குவிக்கும் தூண்டுகோலாய், தார்மீக அழகின் கலைச்சின்னமாய் பல ஆண்டுகளாய் வருண பகவானின் புனிதநீர் அபிஷேகத்தை மாத்திரம் ஏற்று வந்த இப்பாகுபலி, புஜபலி என்ற கோமடேஸ்வரருக்கு 1981ம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஒன்பதாம் தேதி முதல் 26ம் தேதி வரை 1008 கலசங்களால் முடிபூஜையான மஸ்தாபிஷேகம் செய்யப்பட்டது. ஆயிரம் ஆண்டுகள் நிறைவு பெற்றதால் இப்பூஜை மிக விசேஷம் வாய்ந்ததாகச் சொல்லப்பட்டு வருவது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை! ◆

## பஞ்ச சுத்திகள்

1. ஆத்ம சுத்தி : பூஜை செய்பவர் தன் உடம்பைத் திருக்கோயில் உள்ளே இருக்கும் திருமேனியை சுத்தமாக வைத்துக் கொள்ளுதல்.

2. ஸ்தான சுத்தி : பூஜிக்கும் இடத்தை சுத்தப்படுத்துதல்.

3. திரவிய சுத்தி : பூஜைக்குரிய பாத்திரங்களை சுத்தப்படுத்தல்.

4. மந்திர சுத்தி : மூல மந்திரத்தை முறைப்படி சொல்லுதல்.

5. லிங்க சுத்தி : அபிஷேக பாத்திரத்தில் நீர்பரப்பி அதில் தீர்த்தங்களை அவாகனம் செய்து அபிஷேகம் செய்து சுத்தமான ஆடை அணிவித்தல்.

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## பு

புக்க - புகுந்த; விழுந்த, திடீரென்று தோன்றிய; கழிந்த
புக்கிலம் - வீடு; இடம்; உடல்
புக்குப் போதுவார் - புகுந்து வருவார்
புக்கும் புகாதும் - நடையாடுமிடமும் நடையாடாத இடமும்
புகட்டமடை - போட்டமடை
புகட்டிடம் - போட்ட இடம்
புகப்பாய்ச்சி - நிரம்பும்படி பரப்பி
புகப்பாய்ந்து - கால் ஆழும்படி குதித்து
புகப்பெய் - இருந்து வாழும்படிபண்ணு
புகப்பெய்த - கொண்டுவந்து தள்ள
புகப்பெய்தி - அமுக்கப்போகிறாய்
புகர் - காந்தி
புகல் - சரீரம்
புகலுற்று - புகத்தொடங்கி
புகவுய்க்கும் - செலுத்தும்
புகவெய்த - உறைக்கும்படி செய்த
புகழ்கிற்பது - புகழ்வது
புகழ்கோ - புகழ்வேன்
புகழ்துற்றநான் - புகழை நெருங்க அநுபவிக்கப்பெற்ற நான்
புகழ் வீடமுனிந்து - புகழ் அழியும்படி சீறி
புகழார் - புகழையுடையவர்கள்
புகழுநல்லொருவன் - புகழப்படும் நன்மையையுடைய ஒருவன்
புகழோன் - புகழையுடையவன்
புகன்ற - சொன்ன
புகாதும் - நடையாடாத இடமும்
புகாவிடம் - துன்புறுத்தும் பொருள்கள் கையில் அகப்படாமல் இருக்கிற இடம்; பிரிவில் எங்கும் துன்பம் தரும் பொருள்களே மலிந்துள்ளன என்றபடி
புகுத - வாருங்கள்
புகுதரும்போது - புகும்போது
புகுதருவாநின்றன - இனிவரப்போகின்றன
புகுதவைத்துக்கொண்டேன் - நன்றாக வைத்துக்கொண்டேன்
புகுதும் - கிட்டுங்கோள்
புகுந்து முடித்தல் - அள்ளிமுடித்தல்
புகுமதம் - உள்ளே புகும் மதநீர்
புகுவாசல் - தங்குமிடம்
புகுவது புறப்படுவதாய் - உள்ளேபோவது வெளியே வருவதாய்
புகுவாயில் - புகுகிற வாசலிலே
புகே - புகு
புகேன்மின் - புகவேண்டா
புகைத்தான் - புகவைத்தான்
புகைவிளக்கும் - தூபமும் தீபமும்
புகையிலுண்பார் - சோம்பர், வீட்டில் புகைந்து சமையலானால் உண்பர், இன்றேல் வாளா விருப்பர்
புஞ்சி - பஞ்சு
புட்குழி - திருப்புட்குழி என்னும் திவ்யதேசம்
புட்கொடி - கருடனை கொடியாகக் கட்டியிருத்தல்
புட்டி - இடை, மத்தியமாங்கம், ஒக்கலை
புட்டில் - பெட்டி, கூடை, பெட்டிக்கூடை
புட்பாகன் - கருடனை நடத்துகிற விஷ்ணு
புடவைக்கட்டணம் - புடவைப்பரிசு
புடை - பராக்ரமம், இடம்
புடைக்க - அடிக்க
புடைக்கலந்தான் - அலந்தான்-அலமருகிறவன், அலர்ந்தவன், தாம் பால் புடைக்க- அடிக்கமுக மலர்ந்தவன்
புடைக்கும் - முட்டும், கிளம்பும்
புடைத்திடுதி - அடித்துவிட்டாய்
புடைநின்ற நீர் - சூழ்ந்துள்ள நீர்
புடைப்பலதானறி தெய்வம் - புடை-குகை, ஏதோ ஒரிடத்தில் உள்ளதாய், பலவகைப் பட்டதாய், தான் மட்டுமே அறிவதான க்ஷுத்ர தெய்வம்
புண் - மாமிசம்
புண்டரீகமலர் - புண்டரீகம்-தாமரை
புண்டலைக்குன்றம் - புண்ணுள்ள தலையையுடைய குன்றம் போன்ற யானை
புண்ணாராக்கை - புண்நிறைந்த சரீரம்
புணர்க்குமயன் - படைக்கிற பிரமன்

## அகல இருப்புப்பாதை இரயில் புறப்படும் காலம்

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் |
|---|---|---|---|
| 196 | அரக்கோணம் பயணியர் | திருப்பதி - அரக்கோணம் | 04.05 |
| 7405 | கிருஷ்ணா விரைவு | திருப்பதி - செகந்திராபாத் | 05.30 |
| 208 | உள்நகரப் பயணியர் | திருப்பதி - தாடிபத்ரி | 06.30 |
| 529 | கூடூர் பயணியர் | திருப்பதி - கூடூர் | 06.55 |
| 8080 | ஔரா விரைவு | திருப்பதி - ஔரா | 09.45 |
| 6054 | திருப்பதி விரைவு | திருப்பதி - சென்னை | 10.05 |
| 7490 | வாரணாசி-கொச்சின் விரைவு (வெள்ளி) | வாரணாசி-கொச்சின் | 13.45 |
| 439 | ஒங்கோல் பயணியர் | திருப்பதி-ஒங்கோல் | 14.15 |
| 7430 | ராயலசீமா விரைவு | திருப்பதி-ஹைதராபாத் | 15.30 |
| 8440 | பூரி விரைவு (சனி) | திருப்பதி-பூரி | 15.50 |
| 6058 | சப்தகிரி விரைவு | திருப்பதி-சென்னை | 17.30 |
| 7423 | நாராயணாத்ரி விரைவு | திருப்பதி-செகந்திராபாத் | 18.30 |
| 7487 | திருமலை விரைவு | திருப்பதி-விசாகப்பட்டிணம் | 19.00 |
| 7494 | பாலாஜி விரைவு (வியாழன்/ஞாயிறு) | திருப்பதி-மும்பை | 21.40 |
| 214 | மைசூர் பயணியர் | திருப்பதி-மைசூர் | 22.00 |
| 473 | காகிநாடா பயணியர் | திருப்பதி-காகிநாடா | 23.30 |
| 6404 | கருடாத்ரி விரைவு | திருப்பதி-சென்னை | 06.30 |

## இரயில்கள் சேரும், புறப்படும் காலவிவரங்கள்-ரேணிகுண்ட்டா

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் | புறப்படும் காலம் |
|---|---|---|---|---|
| 7029 | கொச்சின்-ஹைதராபாத் விரைவு (செவ்வாய், வெள்ளி, சனி) | கொச்சின்-ஹைதராபாத் | 00.20 | 00.35 |
| 2625 | கேரளா விரைவு | திருவனந்தபுரம்-புதுதில்லி மையம் | 04.15 | 04.25 |
| 2617 | மங்கலா விரைவு | மங்களூர்-நிஜாமுத்தீன் | 05.15 | 05.30 |
| 6687 | நவயுகா விரைவு (செவ்வாய்) | மங்களூர்-ஜம்முதாவி | 09.35 | 09.45 |
| 6017 | ஹிமாசாகர் விரைவு (சனி) | திருவனந்தபுரம்-ஜம்முதாவி | 09.35 | 09.45 |
| 6009 | மும்பை விரைவு | மும்பை-சென்னை | 02.30 | 03.00 |
| 6063 | சென்னை விரைவு | தாதர்-சென்னை | 17.20 | 17.35 |
| 6511 | தாதர் விரைவு | தாதர்-சென்னை | 13.45 | 14.00 |
| 6010 | மும்பை விரைவு | சென்னை-மும்பை | 01.10 | 01.30 |
| 6009 | மும்பை விரைவு | மும்பை-சென்னை | 02.30 | 03.00 |
| 1082 | (ஜெயந்தி)மும்பை விரைவு | கன்யாகுமரி-மும்பை | 03.55 | 04.05 |
| 6064 | சென்னை விரைவு | சென்னை-மும்பை | 09.20 | 09.35 |
| 6512 | தாதர் விரைவு | சென்னை-தாதர் | 14.30 | 14.45 |
| 6688 | நவயுகா விரைவு (ஞாயிறு) | ஜம்முதாவி - மங்களூர் | 03.40 | 03.50 |
| 2618 | மங்களா விரைவு | நிஜாமுத்தீன்-மங்களூர் | 20.40 | 20.50 |
| 6018 | ஹிமாசாகர் விரைவு (வியாழன்) | ஜம்முதாவி-திருவனந்தபுரம் | 03.40 | 03.50 |
| 1081 | (ஜயந்தி) கன்னியாகுமரி விரைவு | மும்பை-கன்னியாகுமரி | 16.25 | 16.40 |
| 2626 | கேரளா விரைவு | புதுதில்லி-திருவனந்தபுரம் | 21.55 | 22.05 |
| 7030 | ஹைதராபாத் கொச்சின் விரைவு (செவ்வாய், வெள்ளி, சனி) | ஹைதராபாத்-கொச்சின் | 00.30 | 00.45 |

திருப்பதி இரயில்நிலைய தகவல்தொடர்பு தொலைபேசி எண். 131

ரேணிகுண்ட்டா இரயில்நிலைய தகவல்தொடர்பு தொலைபேசி எண். 75227

Published on behalf of T.T. Devasthanams by N.S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507.

# திருமலையில் தங்குவசதி நன்கொடைத்திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள்புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் நாள்தோறும் திருமலைக்கு வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை-திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்கள், குடில்கள் (காட்டேஜுகள்) விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்குவசதி கட்டிடங்களைக் கட்டியுள்ளது. ஆனால் நாளுக்குநாள் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை பெருகிவருவதால் திருமலையில் மேலும் பல குடில்கள், விருந்தினர் விடுதிகள், தர்ம சத்திரங்கள் கட்டுவதென தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது. யாத்திரிகப் பொதுமக்கள் பயனுறும் இப்புதிய தங்குவசதி கட்டிடங்கள் கட்டுவதில் யாத்திரிகர்களும் பங்குபெறும் வகையில் நன்கொடை அளிப்பதில் தனி நபர்கள் மட்டுமன்றி தனியார் நிறுவனங்களும், வர்த்தக அமைப்புகளும் அறக்குழுக்களும் முன்வந்துள்ளன. அவர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தாரின் 'தங்குவசதி நன்கொடை'த் திட்டத்தின்கீழ், பின்வரும் கட்டிட வகைகளுக்கு நன்கொடை அளிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது.

### குடில்கள்

1) திருமலை கருடாத்ரி நகர் குடில்களின் முதல்தளத்தில் சி, டி பகுதிகள் கட்டுதற்கு அளிக்க வேண்டிய நன்கொடை ரூ. 2,25,000 ஆகும். முதல் தளத்தின் கட்டிட அளவு 883 பரப்படிகளாகும். ஒவ்வொரு குடிலும் இரண்டு பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியும் (குளியலறைகள் உள்ளடக்கிய) '10 x 10' என்ற அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகளைக் கொண்டு விளங்கும்.

### விருந்தினர் விடுதிகள்

'ஸப்தகிரி சத்திரங்கள்' எனும் கட்டிடங்களில் அலக்நந்தா எனும் ஐந்தாவது கட்டிடத்தில் அறைத்தொகுதி ஒன்று கட்டுதற்கான நன்கொடை ரூ. 1,50,000 ஆகும். இக்கட்டிடத்தொகுதிகள் திருமலையில் குடிநீர் வடிகால் இல்லத்திற்கு அருகே உள்ளன. கட்டப்படும் ஒவ்வொரு அறைத் தொகுதியும் 11.7" x 20.6" அளவு கொண்டதாக விளங்கும். மேலும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளுடன் உள்ளடக்கி விளங்கும் இவ் அறைகளின் மொத்த பரப்பளவு 342 சதுரடிகளாகும். இக்கட்டிடப் பணி ஒரு வருடத்திற்குள் கட்டிமுடிக்கப்படும்.

திருமலை சுராபுரம் தோட்டத்தில் சிறப்புக் குடில்கள். ஒவ்வொரு தளத்திற்கும் நன்கொடைத்தொகை ரூ. 5,00,000 ஆகும். இந்த இடம் திருலைக்கோயிலின் வடகிழக்குப் பகுதியில் ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. ஒவ்வொரு தளமும் 1110 சதுர அடிகள் பரப்பளவுகொண்டு இந்தக் கட்டிடம் விளங்குகிறது. ஒவ்வொரு தளமும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளை உள்ளடக்கி, 12' x 14' அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகள் கொண்டு விளங்கும். இதுதவிர ஒவ்வொன்றும் 12' x 12' என்ற அளவில் கூடிய உணவருந்தும் மற்றும் வரவேற்பு அறைப்பகுதிகளைக் கொண்டு ஓய்வுக்கூடம் 'ஒன்றுடனும் திகழும். வாகனங்கள் நிறுத்துவதற்கான வசதிகளுடன் கூடிய இக்கட்டிடம் ஒரு வருடத்திற்குள் கட்டப்படும்.

### வழிமுறைகள்

நன்கொடையாளர்கள் ஒரு வெள்ளைத்தாளில், கட்டுதற்கு விருப்பமான குடில்களின் விவரங்களைக் குறிப்பிட்டு, குடில்கள் / அறைத்தொகுதிகள் ஆகியவற்றிற்குச் செலுத்த வேண்டிய நன்கொடைத் தொகையினை, (திருப்பதியில் பெறும் வகையில்) 'Executive Officer, T.T. Devasthanams' எனும் பெயரில் ஒரு தேசிய வங்கி காசோலை மூலமாக பெற்று அதனை "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517501" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்தில் அமைதல் நலம். நன்கொடையினை தனிநபரோ/இருவர் இணைந்தோ/தனியார் நிறுவனங்களோ/ வர்த்தக அமைப்புகளோ வழங்கலாம். குடில்கள்/அறைத் தொகுதிகள்/தளங்கள் யாவும் நன்கொடையாளர்களுக்கு வரிசைக்கிரமமாக ஒதுக்கப்படும்.

### நன்கொடையாளர்களுக்கு சலுகைகள்

நன்கொடையாளர்கள் ஒருமுறை தங்கும்போது தொடர்ந்து 10 நாட்களுக்கு மிகாமல், மொத்தத்தில் வருடத்தில் இலவசமாக 60 நாட்களுக்கு தங்கள் தங்குவசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதுபோது அவர்கள் பராமரிப்புக் கட்டணம் மட்டுமே செலுத்துதல் வேண்டும். இந்த வசதியினை தனிநபர் நன்கொடையாளர் மட்டுமே அவர்தம் ஆயுட்காலத்தில் அவரோ, அவரது துணைவியாரோ அல்லது அடுத்த வாரிசுதாரரோ பயன்படுத்திக்கொள்ள முடியும். இருவர் இணைந்தது/தனியார் நிறுவனம்/வர்த்தக அமைப்பு/அறக்கட்டளை போன்ற நன்கொடையாளர்கள் 20 ஆண்டுகளுக்கு இலவசமாக தங்கள் நன்கொடை தங்கு வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

நன்கொடைகளின் பெயர் மற்றும் ஊர் விவரம் ஒருவர் பெயரில் நினைவுச்சின்னமாக கற்பலகை ஒன்றில் பொறிக்கப்பட்டு நன்கொடை பெறப்பட்ட குடில்களின் முன் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். மேற்படி இக்குடில்கள்/அறைத்தொகுதிகள் போன்றவற்றிற்கு வழங்கப்படும் நன்கொடைத் தொகைகளுக்கு எந்தவிதமான வருமானவரி விலக்கும் 'அளிக்கப்படமாட்டாது.

செயலாட்சித் தலைவர், திருமலை திருப்பதி தேவஸ்தானம்.

